# இந்தியாவில் செயின்ட் தாமஸ் கட்டுக்கதை

## தொகுத்தவர்: வேதபிரகாஷ்

# Indiavil Saint Thomas Kattukkatai

## Veda Prakash


மேனாட்டு மதங்கள்
ஆராய்ச்சிக் கழகம்
57, பூந்தமல்லி நெடுஞ்சாலை
மதுரவயல், சென்னை - 602102





நூல்தலைப்பு இந்தியாவில் செயின்ட் தாமஸ் கட்டுக்கதை

பதிப்பகத்தார் மேனாட்டு மதங்கள் ஆராய்ச்சிக் கழகம்
57, பூந்தமல்லி நெடுஞ்சாலை
மதுரவயல், சென்னை - 602102

தொகுத்தவர் வேதபிரகாஷ்

வெளியீட்டுத்தேதி ஆகஸ்டு, 1989

விலை ரூ. 3/-

அச்சிட்டவர் எம். ஆர். பிரின்டர்ஸ், சென்னை-33


சரித்திர ஆசிரியர்களுக்கு வேண்டுகோள்

இச்சிறுநூலை நாங்கள் உங்கள் முன்பு வைக்கின்றோம். படித்தப்பிறகு உங்களுடைய கருத்து எதுவானாலும் எழுதி அனுப்பவும். உங்களுடைய விமர்சனங்கள், யோசனைகளை வரவேற்க்கிறோம்.

இந்நூலைப் பற்றிய எல்லா கேள்விகளுக்கும் பதிலளிக்கத் தயாராக உள்ளோம். எமக்கு வேண்டியது உண்மை. அதுதான் லட்சியம். உலகம் எதிர்ப்பார்ப்பதும் அதுதான். - பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

# 1. மாணவர்களுக்கு புரட்டு வரலாறு

"புதிய கல்விக் கொள்கையின் கீழ் அமைந்த பாடதிட்டத்திற்க்கிணங்க இயற்றப்பட்டது" என்ற முத்தாய்ப்புடன் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 'பதிப்புரிமை தமிழ்நாடு அரசு' என்று குறிப்பிடப்பட்டு சரித்திர ஆதாரமில்லாத செயின்ட் தாமஸ் கட்டுக்கதையை பரப்ப ஆரம்பித்துள்ளது.

உதாரணமாக 'Social Science' (சமூக அறிவியல்) ஆறாம் வகுப்பு ஆங்கிலப் பதிப்பு குறிப்பிடுவதாவது:

"The nomadic Parthians established their rule in western Asia. Gondopheraes was the greatest of the Parthian kings. He ruled from 19 AD to 45 AD. St. Thomas, the disciple of Jesus, visited India during his period. He converted him to Christianity. According to tradition he spread Christianity in Malabar Coast and came to Tamil Nadu. He stayed at St. Thomas Mount and preached Christianity. He was murdered due to religious strife. His body was buried at Santhome Church." ("Early Contacts with Christianity." pp. 98-99)

தமிழ் பதிப்பில் காணப்படுவதோ:

> "கிருத்துவ சமயத் தொடர்பு பார்த்தியர்கள் என்ற அந்நியர் வடமேற்கு இந்தியாவில் ஓர் அரசை நிறுவினர். அவ்வரசில் முக்கியமான மன்னர் கொண்டோபர்னஸ் ஆவார். இவர் கி.பி. 19 முதல் கி.பி. 45 வரை ஆட்சி புரிந்தார். ஏசுநாதரின் சீடர் அர்ச் தோமையர் (தாமஸ்) இம்மன்னரை கிருஸ்தவராக்கினார். மலபார் கடற்கரையிலும் கிருஸ்தவ மதத்தை பரப்பினார். தமிழ்நாட்டில் பரங்கிமலையில் தங்கி மதப் பிரசாரம் செய்தார், கடும் எதிர்ப்பினால் கொலையுண்டார், இவர்து புனித உடல் சாந்தோம் தோவாலயத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது." (ப.100).

மேலே

ஆங்கிலத்திலுள்ள ஒன்பது வாக்கியங்களையும் கீழே உள்ள எட்டு தமிழ் வாக்கியங்களையும் கூர்ந்து படியுங்கள். ஆங்கில வாக்கியங்களை அப்படியே மொழி பெயர்த்து உடன் தமிழ்ப்பதிப்பில் உள்ள வாக்கியங்களையும் அடைப்புக் குறிகளில் ஒப்புமைக்காக கீழே தரப்படுகின்றன.

1. நாடோடிகளான பார்த்தியர்கள் மேற்கு ஆசியாவில் தமது அரசாட்சியினை நிருவினர். (பார்த்தியர்கள் என்ற அந்நியர் வட மேற்கு இந்தியாவில் முக்கியமான ஓர் அரசை நிறுவினர்.)
2. கொண்டோபாரஸ் என்பவர் அவர்களில் மிகவும் உயர்ந்தவர் (அவ்வரசில் முக்கியமான மன்னர் கொண்டோபர்னஸ் ஆவார்).
3. அவர் கி.பி. 19 முதல் 45 வரை ஆண்டார். (இவர் கி.பி.19 முதல் 45 வரை ஆட்சி புரிந்தார்.)

4. ஏசுவின் சீடரான செயின்ட் தாமஸ் இவரது காலத்தில் இந்தியாவிற்கு வந்தார்.(.............).
5. இவர் அவரை கிருத்துவத்திற்கு மதம் மாற்றினார். (எசுநாதரின் சீடர் அர்ச் தோமையர் (தாமஸ்) இம் மன்னரை கிருஸ்தவராக்கினார்).
6. மரபின்மடி இவர் மலபார் கடற்கரையிலும் கிருஸ்தவ மதத்தைப் பரப்பி தமிழ் நாட்டிற்கு வந்தார். (மலபார் கடற்ரையிலும் கிருத்துவ மதத்தை பரப்பினார்.)
7. இவர் (செயின்ட் தாமஸ்) செயின்ட் தாமஸ் மலையில் கிருஸ்துவ மதப் பிரச்சாரம் செய்தார். (தமிழ் நாட்டில் பரங்கி மலையில் தங்கி மதப் பிரச்சாரம் செய்தார்)
8. இவர் மதச் சண்டையினால் கொலை செய்யப்பட்டார், (கடும் எதிர்ப்பினால் கொலையுண்டார்.)
9. இவரது உடல் சாந்தோம் சர்ச்சில் (மாதா கோவிலில்) புதைக்கப்பட்டது. (இவரது புனித உடல் சாந்தோம் தேவாலயத்தில் நல்லடக்கம் செய்யப்ப்பட்டது).

தனித்தனியாகவே மூல ஆவணங்களிலிருந்து சரித்திர ஆசிரியர்கள் பொறுப்புடன் ஆய்ந்து எழுதியுள்ளார்கள் என்று கொண்டாலும், மேற்காணும் வாக்கியங்கள் எவ்வாறு பல மாறுதல்களுடன் இருக்கின்றன என்பதை கவனிக்கவும். ஆங்கிலத்தில் படிக்கும் மாணவர்களுக்கு பார்த்திரியர்கள் நாடோடிகள், இடமோ மேற்காசியா, முக்கியமாக, மரபின்படி தாமஸ் தென்னித்தியாவிற்கு வந்தார் மதத்தைப் பரப்பினார் -கொலையுண்டார் என்று உள்ளது. ஆனால் தமிழில் படிக்கும் மாணவர்களுக்கு சொல்லப்படுவதோ அவ்வாறாக இல்லாமல், ஏதோ நிலை நிறுத்தப்பட்ட சரித்திரத்தைப் போல் விவரங்களை கொடுத்துள்ளனர் நமது சரித்திர ஆசிரியர்கள்.

பல சரித்திர ஆசிரியர்கள் "தாமஸ்" என்ற அப்போஸ்தலர் ஒருவர் இருந்தாரா என்றே மிகவும் தீவிரமாக சந்தேகித்துள்ளனர். ரோம் நகரத்தின் சரிவும் வீழ்ச்சியும் என்ற நூலில் ஆசிரியரான கிப்பன் (Gibbon) குறிப்பிவதாவது; "தாமஸ் என்பவர் ஒரு அப்போஸ்தவரா, மணிக்கிய மதத்தவரா (Manichean) அல்லது ஆர்மினிய வர்த்தகாரா என்ற பிரச்சினை கற்றவரிடையிலேயே வாதத்திற்குரியதாக உள்ளது.

மிகவும் குறிப்பிட்டுச் சொல்லப்படக்கூடிய ஆசிரியர்களான ரிச்சர்டு கார்பே (Richard Garb), ஏ. ஹர்னக் (A. Harnack) மற்றும் எல்.டி.ல. வல்லீ பௌஸின் (L. de la Vallee-Poussin) முதலியோர் இந்த முழுக் கதையும் (அதாவது தாமஸ் இந்தியாவிற்கு வந்ததாகக் குறிப்பிடும் நிகழ்ச்சிக்ளை) ஆதாரமாகக் கொண்டுள்ள 'தாமஸின் பணிகள்' (*Acts of Thomas*) என்ற பைபிளின் தொன்மையினையும் மற்றும் அதன் உண்மையினையும் மறுத்துள்ளனர். ஆகையால்தான், கிருத்துவ மதகுருக்கள் மற்றும் போதகர்கள் இதை உள்ள

பைபிள்களுடன் சேர்க்காமல் ஒதுக்கப்பட்ட ஆகமங்கள் (apocryphal work) வகையில் சேர்த்துள்ளனர்.

பிரபல இந்தியவியல் - சரித்திர வல்லுனர்களான வின்ஸென்ட் ஏ. ஸ்மித் (Vincent A. Smith), வின்டர்னிட்ஸ் (Winternitz), பிரெஞ்சு சரித்திர ஆசிரியர்கள் பாஸ்னேஜ் (Basnage), டெல்லி மோன்ட் (Tillemont), லாக்ரோஸ் (La Croze), ஆங்கில சரித்திர ஆசிரியர்கள் சர் ஜான் காயே (John Kaye), ஜேம்ஸ் ஹவ் (James Hough), பீட்டர்ஸ் எஸ்.ஜே (Peters, S.J) முதலியோரும் இந்திய - தாமஸ் கட்டும் கதையை மறுத்துள்ளனர்.

இவ்வாறிருக்கும் பொழுது, 16 ஆம் நூற்றாண்டில் போர்ச்சுகீசியர்களால் உருவாக்கப்பட்ட கட்டுக் கதை, பிறகு சில கேரள சிரியன் கிருஸ்தவர்களாலும், மேனாட்டு கிருஸ்தவ பாதிரிகளாலும் திட்டமிட்டு இந்தியாவில் கிருஸ்தவ மதம் பரப்ப உதவியாக இருக்கும் என்ற முடிவுடன் பல ஆவணங்களில் மாறுதல்களை செய்து, இன்று வரை பரப்பி வந்து, இப்பொழுது பள்ளிப் பாடங்களிலேயே நுழைந்துள்ளனர் என்பதை மேற்கண்ட முன்னுக்கு பின் முரணான வாக்கியங்களிலிருந்தே அறியலாம்.

# 2. அப்போஸ்தலர்கள் யார் பன்னிருவர் யார்?

புழக்கத்தில் உள்ள அதாவது அங்கீகரிக்கப்பட்டுள்ள பைபிள்களைப் படிக்கும் பொழுது எழும் கேள்விகள், அப்போஸ்தலர்கள் யார்? பன்னிருவர் யார்? என்பனவாகும். தாமஸ் யார்? அப்போஸ்தலர்களில் ஒருவரா அல்லது பன்னிருவரில் ஒருவரா, அல்லது கிப்பன் கேட்டது மாதிரி அவர் 'ஒரு அப்போஸதலரா, மணிக்கிய மதத்தைச் சேர்ந்தவரா அல்லது ஆர்மினிய வர்த்தகரா?"

> 1. "அப்போஸ்தலர் என்ற பெயர் முதலில் பைபிள்களில் காணப்பட்டு, பிறகு கிருஸ்துவின் பன்னிரெண்டு முக்கிய சீடர்களுக்குக் கொடுக்கப்படுகிறது............ நவீன காலத்தில் ஒரு நாட்டிக்கு கிருஸ்துவ மத பிரச்சாரம் செய்ய செல்லும் குழுவின் தலைவருக்கு இப் பெயர் அளிக்கப்படுகிறது. உதாரணமாக செயின்ட் பாட்ரிக் அயர்லாந்தின் அப்போஸ்தலர் என்று அழைக்கப்படுகிறார். 2 கிழக்கத்திய சர்ச்சுகளில் பலி பூசையின் போது படிக்கப்படும் ஒரு மடல் 3.கத்தோலிக்க அப்போஸ்தலர் சர்ச்சின் அதிகாரி" (*The History of Christianity*, Lion Publishing, England, p. 29).

பலதரப்பட்ட பைபிள்களுள் அப்போஸ்தலர்களின் பட்டியல்கள் கீழ்கண்டவாறு காணப்படுகின்றன.

மத்தேயு: சைமன், ஆண்ட்ரூ, ஜேம்ஸ், பிலிப், பார்த்தலோமியோ, தாமஸ், மாத்யூ (ஜனப் பிரதிநிதி), ஜேம்ஸ் (அல்பேயுஸின் மகன்), லேப்பேயுஸ் (முதற் பெயர் தெட்டேயுஸ்), சைமன் (கானான் நாட்டைச் சேர்ந்தவன்) ஜூதாஸ் இஸ்காரியட் (10: 2-4).

மாற்கு: சைமன், ஜேம்ஸ், ஜான், ஆண்ட்ரூ, பிலிப் பார்த்தலோமியோ, மாத்யூ, தாமஸ், ஜேம்ஸ் (அல்பேயுஸின் மகன்), தெட்டேயுஸ், சைமன் (கானான் நாட்டைச் சேர்ந்தவன்), ஜூதாஸ் இஸ்காரியட் (8:16-19)

லூக்கா: சைமன், ஆண்ட்ரூ, ஜேம்ஸ், ஜான், பிலிப் பார்த்தலோமியோ, மாத்யூ, தாமஸ், ஜேம்ஸ் (அல்பேயுஸின் மகன்), தெட்டேயுஸ், சைமன் (ஜெலட் என்ற யூத் பிரிவைச் சேர்ந்தவன்), ஜூதாஸ் (ஜேம்ஸின் சகோதரன்), ஜூதாஸ் இஸ்காரியட் (6:14-16).

அப்போஸ்தலருடைய நடபடிகள்: பீட்டர், ஜேம்ஸ், ஜான், ஆண்ட்ரூ, பிலிப், தாமஸ், பார்த்தலோமியோ, மாத்யூ, ஜேம்ஸ் (அல்பேயுஸின் மகன்), சைமன் (ஜெலட் என்ற யூத பிரிவைச் சேர்ந்தவன்); ஜூதாஸ் (ஜேம்ஸின் சகோதரன்) இவர்களைத் தவிர மத்தியாஸ், பர்னபாஸ், ஜேம்ஸ், ஏசுவின் சகோதரன் சில்வானஸ், திமோதி, அண்ரோஸியஸ் மற்றும் ஜீனியஸ் முதலியோரும் அப்போஸ்தலர்கள் என்று குறிப்பிடப்படுகின்றனர்.

'இருப்பினும் இந்த சித்தாந்தத்திற்கு ஆரம்ப காலத்தில் எந்தவித ஆதாரமும் இல்லை. முக்கியமாக "பன்னிருவர்" மற்றும் "அப்போஸ்தலர்களை" அடையாளம் காணும் எல்லா இடங்களிலும் அடிப்படை வசனங்களே ஒன்றுக்கொன்று எதிராக உள்ளன. நெருங்கிய பன்னிரண்டு சீடர்கள் கொண்டகுழாம் ஏசுவின் காலத்திலேயே ஏற்பட்டதா அல்லது அவரது இறப்பிற்கு பிறகு உடனடியாக ஏற்பட்டதா என்ற வினா எழும்புகிறது. ஆனால் பழைய சாட்சியான செயின்ட் பால், அப்போஸ்தலர்கள் என்றால் பன்னிருவர் என்பதைவிட பரந்த அர்த்தத்தில் புரிந்து கொண்டுள்ளார் என்று சந்தேகமில்லாமல் தெரிகிறது. வசனம்-1 கொரி 15:15 சந்தேகத்தில் இருப்பதால், ஒருவேளை அவர் "அந்த பன்னிருவரை" குறிப்பிடவே இல்லை எனலாம். ஏனெனில் "அந்த பன்னிருவர்" உண்மையிலேயே இங்கு குறிப்பிடப்பட்டு இருந்திருக்குமேயானால் அவர்கள் "அப்போஸ்தலரெல்லோருக்கும்" என்று குறிப்பாக வித்தியாசப்படுத்தி காட்டியுள்ளது இதற்கு அத்தாட்சியாகிறது (1 கொரி.15:7) அவர் அப்போஸ்தலர்களில் மற்றவர்களையும் சேர்த்துக்கொள்கிறார். உதாரணமாக பர்னபாஸ் (1 கொரி. 9: 5-6;கலா.2:9), ஏசுவின் சகோதரன் ஜேம்ஸ் (கலா.1:19), சில்வானஸ¥ம் திமோமதியும் (1 தெசலோ.27; 1 கொரி.1:19) மற்றும் அண்ரோசியஸ்ரும் ஜீனியஸ¥ம் (ரோம.16.7). (*Earliest Christianity: A History of the Period A.D 30-150*, Vol. II, Johannes Weiss, Harper Brothers, Publishers, New York, 1959, p. 673-674).

மேற் குறிப்பிடப்பட்டுள்ள நூலில் ஜோஹன்னஸ் வெயிஸ் இருபத்திரெண்டாம் அத்தியாயத்தில், "கிருத்துவ மதம் தனது முதல் நூற்றாண்டில் பரவுதல் (கி.பி.3-130)" என்ற தலைப்பில் எவ்வாறு கிருத்துவ மதம் ஜூடேயா, சிரியா, ஆசியா மைனர், மெசடோனியா, அக்கையா, மற்றும் ரோமில் அப்போஸ்தலர்களால் பரப்பப்பட்டது என்று விளக்கமாக விவரித்தாலும் இந்தியாவைப் பற்றி அவர் ஒன்றுமே குறிப்பிடாமல் இருக்கிறார். இவரைப்போல பல பிரபலமான ஆசிரியர்களும் கிருத்துவமத சரித்திர நூல்களில் இந்தியாவைப் பற்றி அதாவது தாமஸை சம்பந்தப்படுத்தி குறிப்பிடுவதில்லை.

# 3. பைபிள்களிலுள்ள தாமஸ்

மத்தேயு பன்னிரண்டு அப்போஸ்தலர்களில் தாமஸை குறிப்பிடுகின்றார் (10:3). மாற்கு பன்னிருவருள் ஒருவராக தாமஸைக் குறிப்பிடுபிறார் (3:18). லூக்கா 6:15 ல் தாமஸின் பெயரை அவ்வாறே குறிப்பிடுகிறார். அப்போஸ்தருடைய நடபடிகளிலும் அவர் பெயர் காணப்படுகிறது (1:13).

யோவான் தான் இவரைப்பற்றி மேலும் சில விவரங்களை தருகிறார்.

"அப்பொழுது திதிமு எனப்பட்ட தோமா மற்றச் சீஷர்களை நோக்கி அவரோடேகூட மரிக்கும்படி நாமும் போவோம் வாருங்கள் என்றான்" (11:16).

இயேசு வந்திருந்தபோது பன்னிருவரில் ஒருவனாகிய திதிமு எனப்பட்ட தோமா என்பவன் அவர்களுடனே கூட இருக்கவில்லை. மற்ற சீஷர்கள் கர்த்த்தரைக் கண்டோம் என்று அவனுடனே சொன்னார்கள். அதற்கு அவன், "அவருடைய கைகளில் ஆணிகளினாலுண்டான காயத்தை நான் கண்டு, அந்தக் காயத்திலே என் விரலையிட்டு, என் கையை அவருடைய விலாவிலே போட்டாலொழிய விசுவாசிக்கமாட்டேன்" என்றான். மறுபடியும் எட்டு நாளைக்குப் பின்பு அவருடைய சீஷர்கள் வீட்டுக்குள்ளே இருந்தார்கள்; தோமாவும் அவர்களுடனே கூட இருந்தான்; கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. அப்பொழுது இயேசு வந்து நடுவே நின்று, உங்களுக்குச் சமாதானம் என்றார். பின்பு அவர் தோமாவை நோக்கி நீ உன் விரலை இங்கே நீட்டி, என் கைகளைப் பார்; உன் கையை நீட்டி என் விலாவிலே போடு, அவிசுவாசியாயிராமல் விசுவாசியாயிரு என்றார். தோமா அவருக்குப் பிரதியுத்தரமாக, "என் ஆண்டவரே! என் தேவனே!" என்றான். அதற்கு இயேசு, "தோமாவே நீ என்னை கண்டதினாலே விசுவாசித்தாய் காணாதிருந்தும் விசுவாசிக்கிறவர்கள் பாக்கியவான்கள்" என்றார் (20.24-29). யோவான் அடுத்த அத்தியாயத்திலும் தோமாவின் பெயரைக் குறிப்பிடுகிறார் (21.2) இதைத் தவிர அங்கீகரிக்கப்பட்டுள்ள பைபிள்களில் வேறெந்த குறிப்பும் இல்லை.

ஆகவே அங்கீகரிக்கப்பட்டுள்ள பைபிள்களில் இல்லாததை கிருஸ்துவர்கள் "நம்பிக்கையோடு" விசுவாசிக்கின்றனர் என்றால் அது மிகவும் அவிசுவாசத்திற்குறிய செயலாக இருக்கிறது. மேலும் இது "சந்தேகிக்கும் தாமஸை"ப் பற்றியதாக உள்ளதால், கிருஸ்துவர்களின் விசுவாசமே சந்தேகத்தின் மீது ஆதாரமாக உள்ளதே என்று வியப்பாகவும் உள்ளது. ஆகவே விசுவாசத்திற்கு, அதாவது அங்கீகரிக்கப்பட்டுள்ள பைபிள்களில் இல்லாத "கட்டுக் கதையை" பல மேனாட்டு கிருஸ்துவ ஆசிரியர்கள் மறுத்திருப்பினும் விடாப்பிடியாக இந்தியாவில் இதை "சரித்திரமாக" ஆக்கியுள்ளதைப் பார்க்கும் பொழுது, அதன் பின்னணியில் ஏதோ ஒன்று இருப்பது தெளிவாகிறது.

இந்தியாவில் "சரித்திர" புத்தகங்கள் எழுதும் "'சரித்திர ஆசிரியர்"களுக்கு: அங்கீகரிக்கப்பட்டுள்ள பைபிள்களுக்குள் ஒரே ஒரு இடத்தில்தான் "பார்த்தியா" என்ற பெயர் காணப்படுகிறது (அப்போ.2.9). இதையெல்லாம் அவர்கள் "பார்த்துதான்", "சரித்திரம்" எழுதுகிறார்களா என்பது தெரியவில்லை.

# 4. ஒதுக்கப்பட்ட அல்லது மறைக்கப்பட்டுள்ள புதிய ஆகம பைபிள்கள்

பழைய ஆகமத்தைப் போல புதிய ஆகமத்திலிருந்தும் பல பைபிள்கள் ஒதுக்கி அல்லது மறைத்து வைக்கப்பட்டுள்ளன. 1924 ல் மான்டேக் ரோட்ஸ் ஜேம்ஸ் என்பவர் சில முக்கியமான பைபிள்கள், நடபடிகள், மடல்கள், வெளிப்பட்ட நூல்கள் இவற்றைத் தொகுத்து "ஒதுக்கப்பட்டுள்ள அல்லது மறைத்து வைக்கப்பட்டுள்ள புதிய ஆகமம்" என்ற பெயரில் மொழி பெயர்த்தார். அது ஆக்ஸ்போர்டு பல்கலை கழகத்தால் வெளியிடப்பட்டது. ஆனால் வெளியிடப்பட்டவைகளைத் தவிர இன்னும் பல உள்ளன என்பதை ஆசிரியர் தமது முன்னுரையிலேயே விளக்கமாக குறிப்பிட்டுள்ளார்.

"இதில் காணப்படுகின்ற பல நூல்களைத் தவிர இன்னும் பல "ஒதுக்கப்பட்டுள்ள அல்லது மறைக்கப்பட்டுள்ள புதிய ஆகமம் நூல்கள் உள்ளன. அவைகள் இங்கு இடம் பெறவில்லை. போதுமான காரணங்களுக்காக என்று நான் நம்புகிறேன். அவற்றைப் பற்றிய சிறு குறிப்பு கொடுக்கப்படவேண்டும்.

"அவற்றில் முதல் வகையில் அறிவு சமயவாத மறைக்கப்பட்டுள்ள நூல்கள் (Gnostic Apocrypha) ஆகும். இதுவரையிலும் இவை வெளியிடப்படவில்லை. மூல ஆவணங்கள் முழுமையாக பெர்லினில் உள்ளன.

"இரண்டாவது பெருமளவில் நூல்கள் ஆரம்பகால சர்ச்சின் முறை இறைபணி முதலியவற்றை விளக்குவன.

"மூன்றாவதாக யூத மற்றும் முகமதியர்களால் எழுதப்பட்டுள்ன நூல்களும் சேர்க்காமல் விடப்படுகின்றன" (ப.xxii-xxvi, மேற்குறிப்பிட்ட புத்தகம்).

மேலும் வெளியிடப்பட்டுள்ளவை அப்படியே வார்த்தைக்கு வார்த்தை மொழி பெயர்ப்பு அல்ல, சுருக்கமே ஆகும் என்றும் அவர் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். ஆகையால் இதிலிருந்து நாம் அறிய இயலும் விஷயங்களை விட இன்னும் பல இன்றும் வெளியிடப்படாமல் மறைத்து வைக்கப்பட்டுள்ளன என்பது கிருஸ்தவர்களே ஒப்புக்கொள்கின்ற உண்மையாகிறது.

மூக்கியமான இவை மேரியின் பிறப்பு-வளர்ப்பு, குழந்தைப் பருவ அதிசயங்கள் தேவதைகளால் வளர்க்கப்படுவது, பதினைன்கு ஆண்டுகளுக்குப் பிறகு ஜோசப் அவளை மற்ற ஏழு கன்னிகைகளுடன் வீட்டிற்கு அழைத்துச் செல்வது, ஏசுவின் பிறப்பு, ஏசுவை வளர்த்தல், குழந்தைப் பருவம், அதிசயங்கள், சிறுவன் ஏசுவின் விளையாடல்கள்,

மேரியன் இறப்பு, அப்போஸ்தலர்களின் நடவடிக்கைகள், பணிகள் முதலியன பலவித விருத்தாந்தங்களில் (versions) இடம் பெறுகின்றன.

# 5. தாமஸின் நூல்கள்

தாமஸின் படியுள்ள பையிள், தாமஸின் பிரயாணங்கள் தாமஸின் நடபடிகள் அல்லது பணிகள் தாமஸின் படியுள்ள வெளிப்பட்ட நூல் முதலியனவற்றன் சுருக்கங்களை இங்கு காண்போம்.

தாமஸின் படியுள்ள பைபிளின் ஆவணங்கள் மூன்று அவை கிரேக்க ஆவணங்கள் A மற்றும் B. மூன்றாவது லத்தீன் மொழியில் உள்ளது. உள்ள கிரேக்க ஆவணங்கள் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவையாகும். ஆறாவது நூற்றுண்டைச் சேர்ந்த சிரிய மற்றும் லத்தீன் கையெழுத்துப் பிரதிகள் வியன்னாவில் இருந்தாலும் முழுமையாக இன்று வரை படிக்கப்படாமல் உள்ளன. லத்தீன் ஆவணங்கள், 13ம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்று கருதப்படுகிறது.

இவை ஏசுவின் இளமைப் பருவத்தை விளக்குகின்றன. சக சிறுவர்களுடன் ஏசு விளையாடியது, குறும்புகள் செய்தது, படிக்க ஆசிரியரிடம் சென்றது, பல அதிசயங்கள் செய்தது முதலியன கிருஸ்ணரின் கதைகளை பிரதிபலிப்பதாக உள்ளது என்றும் அவற்றிலிருந்தே பெறப்பட்டவை என்றும் கிருஸ்துவ அறிஞர்களிடையே கருத்து நிலவுகிறது, சி.எ•ப்.சி வோல்னி, "சாம்ராஜ்யங்களின் அழிவுகள்", என்ற நூலில் "கிருஸ்தோஸ்" (Christos) என்ற சொல்லே "கிருஷ்ணா" (Krishna) என்பதிலிருந்துதான் பெறப்ப்பட்டது என்று விளக்கியுள்ளார்.

தாமஸின் பணிகள் (*Acts of Thomas*) என்பதில் அரசன் கொண்டோபாரஸ் அப்பானேஸ் என்ற வர்த்தகனை ஒரு தச்சனை வாங்கி வாருமாறு அனுப்புவது, ஜெருசலேமின் கடைத் தெருவில் ஏசு தோன்றி "ஜீடாஸ் தாமஸை" அப்பானேஸீக்கு விற்ப்பது, ஜீடாஸ் தாமஸ் அவனுடன் கப்பலேறி ஆண்ட்ரோ போலிஸ் என்ற நகரத்தை அடைவது, அங்கு ராஜகுமாரியின் திருமண விழாவை காண்பது, குழலூதும் யூதப் பெண் ஒருத்தி இவரைக் கண்டு ஆசைப்படுவது, யூத மொழியில் பேசுவது, இவர் இவர் முன் இசைத்துக்கொண்டு பாடுவது, முடிவில் அவளை விட்டுச் சென்று விடுவது, இராஜகுமாரியின் திருமணம் முடிந்து, முதலிரவில் ஏசு "ஜீடாஸ் தாமஸ்" உருவத்தில் சென்று தான் அவரின் சகோதரன் என்று சொல்லி மணமக்களிடம் "உடலுறவு" கொள்ளாதீர்கள் என்று பஞ்சணையில் உட்கார்ந்து உபதேசித்து மறைவது, காலையில் பெண்ணின் பெற்றோர் வந்து பார்க்கும் பொழுது, தன் கணவனுக்கருகில் முகத்திரையின்றி இருக்கும் மகளை தாய் கண்டிப்பது, மணமகளோ தனது கணவனைக் காட்டி "இந்த இக உலகம் கணவனுடன் நான் உடலுறவு பொள்ளவில்லை. ஏனெனில் அது மோசத்தனமானது ஆத்மாவின் கசப்புதன்மையயானதும் ஆகும், ஆகையால் நான் ஒரு உண்மையான கணவனுடன் புனைந்துள்ளேன்" என்று ஏசுவைக் குறிப்பிட்டுக் கூறுவது, அரசன் தனது ஆட்களை அனுப்பி பிடித்துவருமாறு அனுப்புவதற்குள், தாமஸ் கப்பலேறி சென்றுவிடுவது, முதலியன முதலாவது நடவடிக்கையில் காணப்படுகின்றன.

இரண்டாவது நடவடிக்கையில், ஜீடாஸ் தாமஸ் கொண்டாபாரஸிடம் வருவது, அவனுக்கு மாளிகை கட்ட பணம் வாங்குவது, அதை ஏழைகளுக்கு விநியோகிப்பது, பல நாட்கள் ஆகியும் மாளிகை கட்டாததை அறிந்து, தாமஸை சிறையில் அடைப்பது, அதற்குள் கொண்டாபாஸின் தமையன் காட் (**Gad**) உடல்நலம் குன்று இறப்பது, அவனது ஆத்மா சொர்க்கத்திக்கு செல்வது, அங்கு

தேவதைகள் தாமஸ் கட்டிய மாளிகையைக் காட்டுவது, அதை நான் தமையினிடமிருந்து வாங்கிக்கொள்கிறேன் என்றவுடன் அவனை மீண்டும் பூமிக்கு அனுப்புவது, உயிர்த்தெழுந்த காட் தமையனிடம் நடந்ததை கூறுவது, இருவரும் புதிய கடவுளான ஏசுவை ஏற்றுக்கொள்வது தாமஸ் தந்தை மகன் மற்றும் பரிசுத்த ஆவி பெயர்களால் உபதேசிப்பது முதலியன இடம் பெறுகின்றன.

மூன்றாவது நடவடிக்கையில் ஒரு அழகான இளைஞன் அழகான பெண்ணை புனைந்ததால், ஒரு டிராகன் (பறக்கும் பாம்பு அல்லது முதலை) அவனைக் கொல்வது, ஏசுவின் ஆணையால் கொண்டாபாராஸ் நகரத்திலிலுந்து கிழக்கில் இரண்டு மைல் தொலைவில் அவன் உடல் கிடந்த இடத்திற்கு வருவது, பாம்பு வெளிவந்து நடந்தை கூறுவது, தாமஸின் ஆணையால் பாம்பு அந்த வாலிபன் உடலில்ருக்கும் விஷத்தை உறிஞ்சி பூமியில் நுழைந்து மறைவது, தாமஸ் அரசனை அது மறைந்த குழியை நன்றாக மூடிவிடுமாறு கூறுவது முதலியன இடம் பெறுகின்றன.

நான்காவது நடவடிக்கையாக (பாம்பு மறைந்த பிறகு) நெடுஞ்சாலைக்கு வந்து ஏசுவைப் பற்றி கூறும் பொழுது, கூட்டத்தினுள் ஒரு குதிரை வருவது, தாமஸ் அதை பேசச் செய்வது, அதன் மீதேறி நகரத்தின் நுழைவாயிலை அடைவது, தாமஸ் கீழே இறங்கி குதிரையை தன்னினத்துடன் சேர்ந்து வாழுமாறு கூறியதும், அவர்கள் கால்களில் விழுந்து இறப்பது, சுற்றியிருந்தவர் அதனை உயிர்த்தெழுமாறு செய்ய கேட்டப் பொழுது, தாமஸ் புதைக்கச் சொல்வது முதலியன இடம் பெறுகின்றன.

ஐந்தாவது நடவடிக்கையில் அங்கிருந்து தாமஸ் நகரத்தில் நுழைவது, அந்த் அழகிய இளைஞன் உடலுறவு கொண்ட அழகியின் வீட்டை அடைதல், தாமஸைக் கண்டதும் அவள் ஓடி வந்து நடந்ததை கூறி தன்னை சாத்தான் பிடித்துக் கொண்டதாக கூறுவது, பிறகு சாத்தான் விலகுவது முதலியன இடம் பெறுகின்றது.

ஆறாவது நடவடிக்கையில் பலி பூசையின் பொழுது ஒரு இளைஞன் உண்ணுவதற்காக தன் கையை வாயிடம் எடுத்துச் செல்லும் பொழுது துவண்டு விழுவது, இதைக் கண்ட தாமஸ் காராணம் கேட்க, அவன் தான் ஒரு பெண்ணை விரும்பியதாகவும் அவளும் தன்னை விரும்பியதாகவும், பிறகு தான் தாமஸ் சொன்ன உபதேசங்களைக் கேட்டு மனம் மாறியதாகவும், அவள் மறுத்ததால் மற்றவருடன் உடலுறவு கொள்வதை சகியாத தான் கத்தியால் கொன்றுவிட்டதாகவும் கூறுவது, தாமஸ் அங்கு சென்று இறந்த பெண்ணை உயிர்த்தெழ செய்வது, மனம் மாறுவது.

எழாவது: மிஸ்டேயுஸ் அல்லது மஜ்டை என்ற அரசனின் ஒரு படைத்தலைவன் தாமஸிடம் வந்து, தன்னுடைய மனைவி மற்றும் மகள் ஒரு திருமணத்திற்கு சென்றதாகவும், திரும்பி வரும்போது ஒரு மனிதன் மற்றும் ஒரு வாலிபன் அவர்களைத் தொட்டதாகவும், அதிலிருந்து இருவரும் வித்தியாசமாக நடந்துகொள்வதாகவும் கூறுவது.

எட்டாவது: தாமஸை அவன் ரதத்தில் ஏற்றிக் கொண்டு தன் இருப்பிடத்திற்கிச் செல்வது, இடையில் கழுதைகள் வந்து தாமஸை வேண்டி தாமே ரதத்தை இழுத்துச் செல்வது, தாமஸ் படைத்தலைவனின் மனைவி மற்றும் மகளை குணப்படுத்துவது, கழுதைகள் திரும்பி சென்று விடுவது.

ஒன்பதாவது: சரிசியஸ் என்பவனின் மனைவியான மைக்டோனியா தாமஸை பார்க்க வருவது, தாமஸ் அவளிடம் நகைகள் எல்லாவற்றையும் எடுத்துவிட சொல்லுதல், கணவனுடன் கூட உடலுறவு கொள்ளாதே என்பது, மிஸ்டேயுஸின் உறவுக்காரனான சரிசியஸ் தன் மனைவி எங்கே என்று கேட்டபொழுது அவளுக்கு உடல்நலம் இல்லை என்று பணிப்பெண்கள் கூறுவது, அவள் படுக்கையறைக்குச் சென்று முகத்திரையை விலக்கி சாப்பிட கூப்பிட அவள் மறுத்தல், இரவில் தன்னுடன் படுக்க அழைத்தபோதும் மறுத்தல், விஷயம் அறிந்த அவன் அரசனிடம் முறையிட, தாமஸ் சிறையில் அடைக்கப்படுதல், மைக்டோனியா 10 தினாரிகள் கொடுத்து ரகசியமாக விடுவிப்பது.

பத்தாவது: படுத்திருக்கும் மைக்டோனியாவை அவள் முகத்திற்கு நேராக வந்து தாமஸ் பார்ப்பது, அவள் தாமஸிடம் ஏசுவின் முத்திரையைக் கொடுக்குமாறு கேட்பது, உடைகளை களைந்து கச்சையுடன் (girdle) நிற்பது, தாமஸிடம் ஞானஸ்நானம் பெறுவது.

பதினொன்று: மைக்டோனியாவை சந்திக்கும் மிஸ்டேயுஸின் மனைவி தெர்தியாவும் மனம் மாறுதல், விஷயம் அறிந்த மிஸ்டேயுஸ் படைத்தலைவனான சிபரின் வீட்டிற்கு சென்று தாமஸை பார்த்தல், அவரை பிடிக்குமாறு வீரர்களுக்கு அரசன் கட்டளையிடுவது.

பன்னிரெண்டு: அரசனான மிஸ்டேயுஸின் மகன் அயுஜேனஸ் தாமஸை தன்னிடம் விட்டுவிடுமாறும், தான் பேசிப் பார்ப்பதற்காகவும் கூறுவது, ஆனால் தாமஸ் உபதேசம் செய்ய ஆரம்பித்ததனால் மிஸ்டெயுஸ் தாமஸை சிறையிலடைப்பது.

பதிமூன்று: அயுஜேனஸ் தாமஸ¤டன் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, காவலாளிகளிடம் லஞ்சம் கொடுத்து தெர்தியா, மைக்டோனியா அவளது தாதி நார்சியா சிறைக்குள் நுழைதல், அயுஜேனஸ் மற்றவருடன் ஞானஸ்நானம் பெறுதல், பிறகு அரசனின் ஆணைப்படி நான்கு வீரர்கள் தாமசஸை ஈட்டிகளாள் குத்தி கொல்வது, உடல் புதைக்கப்படுதல், பிறகு மஸ்டேயிஸ் தோண்டிப் பாக்கும் பொழுது, உடல் இல்லாதிருத்தல், தாமஸின் தோழன் ஒருவன் எற்கனவே தோண்டி அதை மெசபடோமியாவிற்கு எடுத்து சென்றுவிட்டதை அறிதல்.

தாமஸின் வெளிப்படுத்தப்பட்ட நூல், பல தீர்க்க தரிசனங்களைக் கொண்டுள்ளது. வருங்காலத்தில் உலகத்தில் எற்படும் சீர்கேடுகள், அரசர்களின் கொடுங்கோலாட்சி, ஏழு நாட்களில் உலகம் அழிவது, இயேசுவின் இரண்தாவது வருகை, 450 ஆண்டுகளில் (nine jubilees) ஏற்படும் என்பது முதலியன இடம் பெறுகின்றன.

மேற்குறிப்பிடப்பட்ட நு¡ல்களில், தாமஸின் பணிகள் (*Acts of Thomas*) என்ற நூலைமட்டும் எடுத்துக்கொண்டு, இந்தியாவில் தாமஸ் கட்டுக்கதையை பரப்ப முயன்றவர்கள் மற்றும் முயற்சி செய்கின்றவர் பின்னர் யூகங்களாலும். திரிபுகளாலும், கள்ள ஆவணங்கள் மற்றும் வலிந்து பொருள் பெறப்பட்டு அல்லது சில வார்த்தைகளை தமதிச்சைக்கேற்றப்படி மாற்றி எழுதப்பட்ட நூல்களின் துணையுடன்தான், இந்தியாவின் தாமஸ் கட்டுக்கதையை புனைந்துள்ளனர்.

முன்னமே குறிப்பிட்டபடி தாமஸின் பணிகள் உண்மையினையும், தொன்மையினையும் மறுத்திறுப்பினும் அதிலுள்ள உள்ளத்தாட்சிகளே, எவ்வாறு இது கட்டுக்கதை என்று எடுத்து காட்டுவதை இனி காண்போம்.

# 6. உள்ளத்தாட்சிகள் குட்டை வெளிப் படுத்துகின்றன.

வெளியிடப்பட்டுள்ள தாமஸின் பணிகள் பதிமூன்று நடபடிகள்: 70 வசனங்கள் கொண்டுள்ளது. அதை தொடர்ச்சியாக வாசிக்கும் பொழுது புலப்படும் உண்மைகள் கீழே தரப்பட்டுள்ளன. வசனங்களின் எண்கள் அடைப்புக் குறிகளில் தரப்படுகின்றன.

1. இயேசு ஒரு கடவுளாக மதிக்கப்படுகிறார். புதிய கடவுள் (20,69,70), உண்மையின் கடவுள் (25), கர்த்தரும் கடவுளும் (26), கடவுளின் கடவுள் (47), மிகவும் உயர்ந்த கடவுள் (47), கடவுள் இயேசு கிறிஸ்து (52), (54) (59) (60), வாழும் கடவுள், மிகவும் உயர்ந்த கடவுள் (47), கடவுள் இயேசு கிறிஸ்து (52) (54) (59) (60), வாழும் கடவுள் (60) மற்றும் 71, 73, 81, 87, 106, 132, 159, 165, 167, வசனங்கள் பலவாறு குறிப்பிடப்படுகின்றன. கிறிஸ்துவானவர் தாங்கள் 'ஒரு கடவுள்' நம்பிக்கைக் கொண்டவர்கள் என்றால் பைபிளின் படி அவர்களது கடவுள் யெகோவா ஆகும். ஆகவே இயேசுவை கடவுளாக மாற்றுவது கிறிஸ்துவ இறையியலுக்கு மட்டுமல்லாது செமித்திய இறையியலிற்கே ஒவ்வாததாகும்.
2. திரியேகத்துவம் (Doctrine of Trinity) 70, 96, 121, 132, 167, 170, வசனங்களில் தந்தை ஆவி, மகன், என்று குறிப்பிடப்படுகின்றது. கி.பி 381 ல் கான்ஸ்டான்டி நோபில் சபை திரியேகத்துவத்திற்கு ஒரு முழுவிவரணம் அளித்து கி.பி 383 ல் மன்னன் தெஹொடோஸியஸ் (Theodosius) யார் திரியேகத்துவத்தை ஒப்புக்கொள்ளாமல், வணங்காமலிருக்கிறார்களோ, அவர்களை தண்டிப்பதாக பய முறுத்தினான். கி.பி 519 ல் இந்த தத்துவம் பற்றி சபைகளில் பாட ஆணையிடப்பட்டது. கி.பி 669 ல் பாதிரிகள் இந்த தத்துவ பாடல்களை மனப்பாடம் செய்யுமாறு கட்டளையிடப்பட்டது. 826 ல் பிஷப் பேசில் (Basil) ஒவ்வொரு ஞாயிற்று கிழமையும் இதை தங்களது திருப்பலியில் சேர்த்துக்கொள்ள ஆணையிடப்பட்டு, பிரபலமாகியது. ஆகவே இவ் வசனங்கள் கி.பி 826 ம் ஆண்டிற்கு பிறகு எழுதப்பட்டிருக்க வேண்டும். உள்ள ஆவணங்களும் 9 ம்-11 ம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவைதாம் என்று முன்னமே குறிப்பிடப்பட்டது. மேலும் பைபிளில் திரியேகத்துவத்தைக் குறிப்பிடுவதாக கூறப்படும் வசனங்கள் 1 யோவான் 5-6, 8 இடைச் செருகல் என்று நிறுபிக்கப்பட்டு, அவை நீக்கப்பட்டுள்ளன. உண்மை கிருஸ்துவர்கள் திரியேகத்துவத்தை ஆரம்ப காலத்திலிருந்து இன்று வரை ஏற்றுக்கொண்டதில்லை.
3. படிப்படியாக ஜூடாஸ் தாமஸ் பல பெயர்களில் அழைக்கப்பட்டு, ஜூடாஸ் தாமஸ் (11), இயேசுவின் சகோதரன் (11), இரு உரு கொண்டவன் (34, 42), தாமஸ¤ம் இயேசுவும் இரட்டையர் (39), இயேசுவைப் போன்ற உரு கொண்டவன் (11) என பலவாறு விவரிக்கப்பட்டு இறுதியில் கடவுளாக மாற்றப்படுகிறார் (106). இதன் படி தாமஸ் கிருஸ்துவர்கள் மற்றும் சிரிய கிருஸ்துவர்கள் தாமஸை கடவுளாக ஏற்றுகொள்வார்களா?

4. படிப்படியாக தாமஸ் இயேசுவைப் போல மாற்றப்படும் முயற்சியும் காணப்படுகிறது. இயேசுவை போன்றவர், இயேசுவின் சகோதரர், இரட்டையர், இரு உரு கொண்டவர், காப்பவர், இறுதியாக கடவுள் என்று அழைக்கப்படுகிறார். மேலும் ஜே.எம் ராபர்ட்சன், ஆல்பர்ட் சுவைட்சர் முதலியோர் தமது உலக புகழ் பெற்ற நூல்களில் எவ்வாறு யூதர்களை திருப்தி படுத்தும் வகையில் இயேசுவை மெசியாவாக மாற்ற ஆரம்பகால கிருஸ்துவ ஆசிரியர்கள் முயன்றனர் என்று எடுத்துகாட்டுயுள்ளனர். மத்தேயு 21:1-7 வசனங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதுபடி, இயேசு ஒரு கழுதை மற்றும் கழுதைகுட்டி மீது உட்கார வைக்கப்பட்டு ஜெருசலேம் நகரில் நுழைவிக்கச் செய்யப்பட்ட நிகழ்ச்சி, ஜெக்கரியாவிலுள்ள (6:9) ஒரு 'மெசியா தீர்க்கதரிசனத்தை' மனதில் வைத்துக் கொண்டு அவ்விதம் செய்ததாக விமர்சகர்கள் விளக்குகின்றனர். அதே முயற்சி இங்கும் காணப்படுகிறது. தாமஸ் குதிரை மீதேறி நகரத்தில் நுழைதல் (39;41), கழுதைகள் இவரது வாகனத்தை இழுத்துக் கொண்டு நகர வாயில் வரை வருதல் (69:71), சிபர் அவனுடைய மனைவி, மகள், மைக்டோனியா அவளது தாதி நார்சியா, தெர்தியா, அயுஜேனஸ் முதலியோர் அவரது சீடர்களாகி அவருடனே செல்வது, இறந்தவர்களை உயிர்ப்பித்தல், மற்ற அதிசயங்களை செய்தல், முதலியவற்றை நோக்கத்தக்கது.

5. குறிப்பாக பைபிளில் திருமணம் ஒப்புக்கொள்ளப்பட்டது மட்டு மன்றி, அங்கீகரிக்கவும் பட்டது. யெகோவா ஆண்-பெண்ணை தோற்றுவித்து பலுகிப் பெருகி பூமியை நிரப்பச் சொன்னார். (ஆதி1, 27-28), பின்பு தேவனாகிய கர்த்தர் மனுஷன் தனிமையாக இருப்பது நல்லதல்ல, ஏற்ற துணையை அவனுக்கு உண்டாக்குவேன் என்றார் (ஆதி. 2-18). விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாயும், 'விவாகமஞ்சம் அசுதிப்படாததாயும் இருப்பதாக' (எபிரேயர்13.4), எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் இங்கோ 'திருமணம் நேர்மையற்ற சீர்கேடு' என்று ஒரு மனைவியே கூறுகிறாள் (124), ஏசு புது மண தம்பதியரின் முதலிரவில் விவாக மஞ்சத்தில் அமர்ந்து 'உடலுறவு கொள்ளாதே' என்று உபதேசம் செய்கிறார்(12), மற்ற வசனங்களிலும் (14, 31, 51, 84, 88, 101, 124) நியாயப்படி மணந்துக்கொண்ட கணவன்-மனைவி, உடலுறவே சீர்கெட்டது என்று கடுமையாக கண்டிக்கப்படுகிறது. திருமணமான பெண்களுக்கும் ஏசுவே சிறந்த கணவன் என்றும் வலியுறுத்தப்படுகிறது (14, 93). இவையெல்லாம் முன்னுக்குப் பின் முரணாக உள்ளன. தாமஸ் மைக்டோனியாவின் கணவனான சரிசியஸை 'அவளது சகோதரன்' என்று குறிப்பிடுகிறார் (130). இவைகளெல்லாம் இந்திய சமுதாயத்திற்கு சிறிதும் சம்மந்தமில்லை.

6. திருமணம் செய்துகொண்ட பெண்கள் முகத்திரையிட்டு இருப்பதாக சித்தரிக்கப்படுகின்றனர் (13-89), அண்ட்ராபோலிஸின் ராஜகுமாரி முகத்திரையின்றி தனது கணவர் முன் உட்கார்ந்திருப்பதைக் கண்ட அவளது தாயார், "உன் கணவனுடன் நெடுங்காளம் பழகியதைப் போல இவ்வாறு உட்கார்ந்திருக்கிறாயே, உனக்கு வெட்கமாக இல்லை? என்று கேட்கிறாள் (13), சரிசிரியஸ் படுக்கையறைனுள் நுழைந்து படுத்திருக்கும் தனது மனைவியின் முகத்திரையை விலக்கி முத்தமிடுகிறான் (89). இவையும் இந்திய சமுதாயத்திற்கு சம்பந்தமில்லாத வர்ணனைகள்.

7. மைக்டோனியா ஒரு இடத்தில் 'வாழ்கின்ற கடவுளின் சீடரே' நீங்கள் ஒரு பாலைவன நாட்டிற்கு வந்துள்ளீர் ஏனெனில் நாங்கள் பாலைவனத்தில் வசிக்கிறேம், என்று தாமஸை விளிக்கிறாள் (87). மைக்டோனியா தன்னுடன் படுக்க மறுத்ததால் வருந்தி சரிசிரியஸ் கூறும் பொழுது, '...உன்னிடமிருந்து எனக்கு எந்த உதவியும் கிடைக்கவில்லை. இதுவரை நான் வழிபட்டு வந்த கிழக்கத்திய கடவுளர்களையும் நான் இனிமேல் வழிபட போவதில்லை என குறிப்பிடுவது நோக்கத்தக்கது (115). ஏனெனில் அவன் இந்தியாவில் இருந்திருந்தால் இந்திய கடவுளர்களை வணங்கியிருந்தால்' கிழக்கத்திய கடவுளர்கள்' என்று குறிப்பிட்டிருக்கமாட்டான், 'நமது கடவுளர்கள் அல்லது இந்திய கடவுளர்கள்' என்றே சொல்லியிருப்பான். தாமஸை விடுவிக்க மைக்டோனியா 10 தினாரிகள் அல்லது 20 ஜூஜேக்கள் லஞ்சமாகக் கொடுக்கிறாள் (118), இந்தியாவில் அக்காலத்தில் இம்மாதிரியான 'பெயர்கள்' நாணயங்களுக்கு வழங்கப்பட்டதில்லை. மேலும் மேற்குறிப்பிடப்பட்ட 115ம் வசனத்தில் 'கிழக்கத்திய கடவுளர்கள்' என்று குறிப்பிட்டதால் நிச்சயமாக அவனது நாடு இந்தியாவிற்கு மேற்கில் இருந்திருக்க வேண்டும்.

8. தாமஸ் மற்ற அப்போஸ்தலர்களுடன் ஜெருஸலேமில் உள்ளார் (1). கப்பலேறி அப்பானேஸ¥டன் அன்ட்ராபோலிஸை அடைகிறார் (3). அன்ட்ராபோலிஸை விட்டு பயணமாகிறார் (16). அப்பானேஸ¥டன் கொண்டாபாரஸின் ராஜ்ஜியத்தை அடைகிறார் (17). அங்கிருந்து கிழக்குச் சாலை இரண்டு கல் தொலைவிலுள்ள இடத்தை அடைகிறார் (30). அவர் தன்னுடைய வழியிலேயே பயணமாகிறார் (68). படைத் தலைவனுடன் இரதத்தில் இரண்டு கல் தூரம் பயணம் செய்த பிறகு கழுதைகள் வருகின்றன (69). நகரவாயிலில் விட்டுச் செல்கின்றன. அதற்கு முன் ஒரு குதிரை அவரை சுமந்து நகரவாயிலில் விடுகிறது. பிறகு நான்கு வீரர்களால் ஈட்டிகளால் குத்தப்பட்டு இறக்கிறார் (168). இவரது உடல் தோண்டுயெடுக்கப் பட்டு அவரது சீடர் ஒருவரால் மெசபடோமியாவிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது (170). தாமஸின் நடமாட்டங்களைப் பற்றிய விவரங்கள் 'தாமஸின் பணிகள் 'என்ற நூலிலிருந்து இவ்வளவுதான் கிடைக்கின்றன. அன்ட்ராபோலிஸ் (Andrapolis) என்பது கிரேக்கப் பெயர் ஆகும். 'இரண்டு கல்தூரம்' பிரயாணம் செய்தார் என்றுள்ளது. மற்ற இடங்களில் தூரங்களைப் பற்றியோ, நகரங்களின் பெயர்களைப் பற்றியோ நாடுகளைப் பற்றியோ குறிப்புகள் இல்லை. இதிலிருந்து அவரது நடமாட்டங்கள் ஒரு குறுகிய பூகோள பரப்பளவிலேயே உள்ளது என்று தெரிகிறது.

9. தலையில் ஒன்றுமில்லாமல் மைக்டோனியா நிற்கிறாள். தாமஸ் எண்ணை வார்க்கிறார். பிறகு அவளது தாதியிடம் மைக்டோனியாவின் உடைகளை எடுத்துவிட்டு, இடைக்கச்சை அணிவிக்கச் சொல்கிறார். அருகிலுள்ள நீரூற்றிற்கு சென்று அவளுக்கு ஞான ஸ்நானம் செய்விக்கிறார் (121). சிபரின் மனைவி, மகள், தெர்தியா, மைக்டோனியா, நார்சியா, அயுஜேனஸின் மனைவி நெசாரா முதலியோர் தாமஸிடம் வருகின்றனர் (155). தாமஸ் மைக்டோனியாவிடம் 'உனது சகோதரிகளின் உடைகளை கலைவாயாக' என்றார். அவள் அவர்களது உடைகளை அவிழ்த்திவிட்டு இடைக்கச்சைகளை அணிவித்து அழைத்து வருகிறாள். அவர்களுக்கு ஞானஸ்நானம்

செய்விக்கப்படுகிறது (157). உடைகளை அவிழ்த்திவிட்டு, இடைக்கச்சையுடன் ஒரு ஆடவனிடம் ஞானஸ்நானம் பெறும் வழக்கம் இந்தியாவிற்கு பொருத்தமாகவில்லை. இது யூதர்களின் பழக்கமே ஆகும். மேலும் மணமான ஒரு இந்திய பெண் அவ்வாறு தனது கணவனை விடுத்து மற்ற ஆடவரின் முன் அவ்வாறு நின்று புதிய சடங்குகளை ஏற்றுக்கொள்வதாக விளக்குவது இந்திய நாட்டு பண்பாடு, கலாச்சாரம் மற்றும் மரபு இவற்றிற்கு கிஞ்சித்தேனும் ஒப்புடையதாக இல்லை.

10. கொண்டபாரஸ் என்ற பெயர் பார்த்திய (Parthian) அல்லது பாரசிக (Persian) நாட்டுச் சொல்லாகும். மற்றவர்களின் பெயர்கள் யூத, கிரேக்க ரோமானியர்களின் பெயர்களாக உள்ளன. மெசடோனியாவின் வடகிழக்குப் பகுதியில் மைக்டோனியா என்ற மாவட்டம் இருந்தது. ஆம்பிபோலிஸ், அட்ரியான்போல்,ஸ்கைதோ போலிஸ், ஹெலியோ போலிஸ் - என்பது போன்ற நகரங்களை செமித்திய நாடுகளின் வரைபடங்களில் காணலாம். 'போலிஸ்' என்றால் கிரேக்கத்தில் 'நகரம்' என்று பொருள். அன்ட்ராபோலிஸ் கிரேக்கத்தை காட்டுகிறது. மேலும் இந்த நூலில் குறிப்பிடப்பட்டுள்ள விவரங்கள், பெயர்கள், பழக்க வழக்கங்கள் முதலியன எல்லாமே ஒரு யூத அல்லது பாரசீக நாட்டுலுள்ள இடத்தைத்தான் குறிப்பிடுகின்றன.

மேற்காணும் உள் அத்தாட்சிகளினின்று (internal evidences) தாமஸ். இந்தியாவிற்கு வரவில்லை என்பது திண்ணமாகிறது. இனி தாமஸ் இந்தியாவிற்கு வந்தார், அதிலும் தென்னிந்தியாவிற்கு வந்தார்,மைலாப்பூரில் அவரது கல்லரை உள்ளது என்பது பற்றிய விவரங்களை ஆய்வோம்.

# 7. மைலாப்பூரிலுள்ள இரண்டாவது கல்லறை

மைலாப்பூரில் சாந்தோம் கதீட்ரலில் வடக்கு-தெற்காக கி.பி 1288ம் வருடத்திற்கு முன்பு புதைக்கப்படுட 'ஒரு தாமஸின்' கல்லறை 'செயின்ட் தாமஸின்' கல்லறை' என்று இந்திய கிருத்துவர்களில் ஒரு சாரார்களால் மதிக்கப்பட்டு வருகின்றது. ஆனால் இந்த கல்லறை அல்லது 'அந்த தாமஸ்' அல்லது வேறு எந்த தாமஸைப் பற்றிய எந்த குறிப்பும் 13ம் நூற்றாண்டிற்கு முற்பட்ட எந்த ஆவணங்களிலும் குறிப்பிடப் பட்டிருக்கவில்லை.

தாமஸ் மாபார் (Malabar) அதாவது சோழ மண்டலத்திற்கு (Coromandel), வடஆப்பிரிக்காவிலுள்ள நூபியாவில் (Nubian) உபதேசித்த பிறகு வந்ததாகவும், அங்கு ஒரு 'கவி எனப்படுகின்ற பறையன்' (Pariah) ஒரு மயிலின் மீது குறிவைத்து அம்பெய்த பொழுது, அது தற்செயலாக அவர் மீது பட்டு இறந்த்தாகவும், கிருத்துவர்களால் கி.பி. 1288-93ல் மார்க்கோ போலோவிற்கு சொல்லப்பட்டது. ஆகையால் இன்றும் ஆசியா, ஐரோப்பா மற்றும் ஆப்பிரிக்காவிலுள்ள ஆவணங்கள் குறிப்பிட்டுள்ள செயின்ட் தாமஸ் 'மதத்திற்கான உயிர் துறந்தவர்' (Martyr) என்றில்லாமல் ஒரு சாதாரணமான விதத்தில் உயிரிழந்தவராகச் சித்தரிக்கப்படுகிறார். தோராயமாக கி.பி. 210ஐச் சேர்ந்த ஜூடாஸ் தாமஸ் (Judas Thomas) என்பவரின் சிரியப் பணிகள் (Syria Acts) மற்றும் 1517ம் ஆண்டைச் சேர்ந்த தென்னிந்திய ஆவணங்களிலும் அவர் மத்த்திற்காக உயிரிழந்தார். என்றே குறிப்பிடுகிறார். பிறகுதான், அதாவது 1517ற்கு மேல் அவர் பலவிதமாக சித்தரிக்கப்படுகிறார். போர்ச்சுகீசிய டியோகோ பெர்னான்டிஸ் (Diogo Fernandez) என்பவரும் தாமஸ் 'மதத்திற்காக உயிரிழந்தவர்' என்றுதான் குறிப்பிடுகின்றார். (*Marco Polo,* Vol I, Book 3, Chapters 18, 17, 20 மற்றும் 25).

மேலும் பறையனின் அம்பால் இறந்த நூபியாவிலிருந்து வந்த தோமாவை முகமதியர்கள் தங்களைச் சேர்ந்தவர் என்று 'சாராயின் அவரியன்' என்ற அராபிக் மற்றும் தமிழ் கலந்த பெயரில் அழைத்து வந்தனர். ஏனெனில் தாமஸ் அபிஸீனியாவில் இருந்ததாகவும் அவர்கள் கூறிக் கொண்டனர். ஆகவே இக்கல்லறை 8-9 நூற்றாண்டுகளுக்குப் பிறகுதான் தோன்றியிருக்க வேண்டும். மேலும் வேறெந்த ஆவணமும் தாமஸ், நூபியா அல்லது அபிஸீனியாவில் உபதேசம் செய்தார், என்று குறிப்பிடவில்லை. மேற்சொல்லப்பட்ட வடக்கு-தெற்கு கல்லறை டியோகா பெர்னான்டிஸால் 1523ல் திறக்கப்பட்டது.

# 8. மைலாப்பூரின் இரண்டு கல்லறைகளுக்கு எதிரானஅத்தாட்சிகள்

**கா**லனியல் சர் ஹென்றி யூஸ் (Henry Yule) குறிப்பிட்டுவதாவது, இந்த கேள்வியானது ('செயின்ட் தாமஸைப் பற்றியது) இந்தியாவிலுள்ள அற்புத மற்றும் விசித்திரமான சாகச கற்பனைக் கதை வல்லுனர்களுக்கு, இதன் சம்பந்தமான வித்தியாசமான கருத்துக்களுள் ஒன்றாக மாறிவிட்டன. 1498ல் போர்ச்சுகீசியரால் அறிமுகப்படுத்தப்பட்ட இலத்தீன் சடங்குகள் மற்றும் பழைய சீரிய கடங்குகளில், சென்னையிலுள்ள கத்தோலிக்கர் தாம் தமது ஐரோப்பிய அதாவது இலத்தீன் சடங்குகள் மூலம் தமது அதிகாரத்தை செலுத்துகிறார்கள். அவர்கள் 1). சாந்தோம் கதீட்ரலிலுள்ள கல்லறை 2). சின்னமலை மற்றும் 3). செயின்ட் தாமஸ் மலை மற்றும் மைலாப்பூருடன்)) செயின்ட் தாமஸை சம்பந்தப்படுத்தும் முழுக் கதை இவையெல்லாவற்றையும் மிகவும் இகழ்ச்சியுடன் கருதுகிறார்கள் (*Marco Polo*, Vol. II. 3, p. 358).

1871ல் சென்னையிலுள்ள கத்தோலிக்கர்கள் உறுதியாக இந்த கதையை நம்பாமல் இருந்ததற்கு காரணங்கள் இருந்தன. அவைகளுள் முக்கியமானவை பின்வருமாறு:

1. முதலில் 1288-93ல் மார்க்கோபோலோவிடமும், பிறகு 1348ல் பிஷப் மரிக்நோலி, (Marignoli) பார்போஸா (Barbosa) (1500-16) மற்றும் டியோகா பெர்னான்டிஸ் (1517) முதலியோரிடம் கிருத்துவர்கள் 'தங்களது தாமஸ்' ஒரு பறையனால் அம்பு மூலம் கொல்லப்பட்ட தியாகமற்ற சாவு பெற்ற ஒரு தாமஸ் என்று ஒப்புக்கொண்டதன் மூலமும், மேலும் 'இந்த தாமஸ்' செயின்ட் தாமஸ் பற்றி உலகத்திலுள்ள மற்ற குறிப்புகளைவிட ஏன் 1517க்கு பிறகுள்ள தென்னிந்திய குறிப்புகளைவிட மிகவும் மாறுபட்டுள்ளதால் சந்தேகிக்க நிச்சயமாக இடமிருந்தது.
2. 1522 மற்றும் 1523 ஆண்டுகளில் மைலாப்பூர் கல்லறைகள் திறக்கப்பட்டு அதிலிருந்து செயின்ட் தாமஸின் எலும்புக் கூட்டின் எலும்புகள் கண்டெக்கட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால் செயின்ட் தாமஸின் எழும்புகள் மண்டையோட்டுன் எந்தப் பகுதியும் காணப்படவில்லை என்று 1566ல் ஒர்டோனா பிஷப் மற்றும் மற்றவர்களால் உறுதி செய்யப்பட்டு கிபி 232-3லேயே எங்கோ பார்த்தியா அல்லது பாரசிகம் அல்லது இந்தியாவின் ஒரு பகுதியிலிருந்து, எடிஸா (Edessa) விற்கு எடுத்து செல்லப்பட்டு 1258லிருத்து கிழக்கு இத்தாலியிலள்ள ஓர்டோனா (Ortona) சர்ச்சில் வழிபடப்பட்டு வருகிறது. ஆனால் தாமஸின் பணிகளிலோ தாமஸின் உடல் அல்லது எலும்புக்கூடுகள் என்று குறிப்பிடப்படாமல், சகோதரர்களில் ஒருவனால் "தாமஸின் உடல்" கொண்டோபாரஸின் நாட்டிலிருந்து மெசபடோமியாவிற்கு எடுத்து செல்லப்பட்டது என்றிருப்பதை முன்பே குறிப்பிடப்பட்டது.
3. மைலாப்பூரிலுள்ள இப்பொழுதைய கல்லறையைத் தவிர பார்போலா காலத்தில் 1500-16 ஒரு முதிய முகமதியனால் (கிருத்துவனால் அல்ல)

கண்டெடுக்கப்பட்டு, 1323 ல் டியோகாவால் திறக்கப்பட்டகல்லறை, தென்னிந்திய முகம்திய கல்லறையைப் போல வடக்கு-தெற்கு திசையில் இருந்தது. யூதர்கள் அல்லது கிழக்கத்தியக் கிருத்துவர்களைப் போலல்லாது மற்றும் இந்துக்களைப் போன்று தலை தெற்கு திசையில் இல்லாது அந்த செயின்ட் தாமஸின் எழும்புக்கூடு என்று சொல்லப்பட்ட எலும்புக்கூடு தலை வடக்கிலும் கால் தெற்கிலும் வைத்துப் புதைக்கப்பட்டிருந்தது.

4. "சிரியா தோமா" அல்லது "தாமா" என்ற பெயர் முகமதியர்களாலும் உபயோகப்படுத்தப்பட்டு வந்துள்ளது அரேபிய மொழிகளில் "தூமா" அல்லது 'தவம்மா" என்று வழங்கப்படும் பெயர்கள் இரண்டு முறை பிறந்தவன் என்றே இரு மொழிகளிலும் வழங்கப்படுகின்றன. 14 வது நூற்றாண்டில் வங்காளத்தில் சோனார்கோவன் என்ற இடத்தில் வாழ்ந்த முகமகிய துறவி மற்றும் பண்டிதரின் பெயர் சர்புதீன் தாவம்மா என்பதாகும் என்பது நோக்கத்தக்கது.
5. மேலும் 1543 போர்ச்சுகீசியர் மார்டிம் அல்•பான்ஸோ-டி-சௌசாவின் ஆணையின் கீழ், 45 கப்பல்கள் கொண்ட ஒரு பெரிய கடற்படையுடன் கோவாவிலிருந்து புறப்பட்டு "செயின்ட் தாமஸ் சின்னங்களை" தமிழகத்துள் நுழைக்க முயன்றனர்.
6. 13-11-1932 தேதிட்ட வாடிகனின் கடிதம், இந்த தென்னிந்திய கிருத்துவ நம்பிக்கையானது நிரூபிக்கப்பட்டாதது என்று குறிப்பிடப்படுகிறது போப் லியோ XIII ன் 1-9-1866 தேதியிட்ட கடிதம் மற்றும் போப் பயஸ் XI ன் 21-12-1923 தேதியிட்ட கடிதம், தென்னிந்திய தாமஸ் நம்பிக்கையாய் பற்றி முடிவாக எதையும் குறிப்பிடவில்லை.
7. செயின்ட் தாமஸ் கிருத்துவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் இந்தியர்கள் என்றுமே வாடிகனுடன் ஒத்துப்போகவில்லை. 1599 ல் ரோமுடன் ஒரு தற்கலிக இணைப்பு எற்படுட்தப் பட்டது. ஆனால் 1653 ல், மறுபடியும் அவர்கள் தங்களது சுதந்திரத்தை உறுதி படுத்திக்கொண்டனர். அவர்களின் இறைப்பணி சிரிய முறையில் இருந்தது. ஆதரவோ, கிரேக்க சர்ச்சிர்க்கு இருந்தது.
8. மேலும் ரோமன் கத்தோலிக்கர் மற்றும் சிரிய கிருத்துவர்களுக்கும் இடையில் கீழ்கண்ட அடிப்படை வேற்றுமைகள் காணப்படுகின்றன: ரோமன் கத்தோலிக்கர் சிரிய கிருஸ்துவர் (1) பலி பூசையின் போது ரொட்டி மற்றும் சாராயம் (மது) ஏசுவின் உடல் மற்றும் இரத்தமாக மாறுவதாக நம்புகிறார்கள். அவ்வாறன மாறுதலை நம்புவதில்லை. (2) ஆதாம்-ஏவாளின் முதல் பாவம் எல்ல கிருஸ்துவர்களையும் தொடர்ந்தாலும், மேரி பாவமற்றவள் என்று நம்புகிறார்கள். மேரி பாவமற்றவள் என்று நம்புவதில்லை. (3) போப் குறையற்றவர் அல்லது பிழையற்றவர் (infallible) என்று கருதுகிறார்கள். போப்பின் குறையற்ற அல்லது பிழையற்றத் தன்மையினை ஏற்றுக்கொள்வதில்லை.
9. சிரிய மலபார் கிருத்துவ குருமார்களுக்கும் வாடிகனுக்கும் இறையியல் தொகுப்பு, கிருஸ்துவ சபையின் சட்டத் தொகுப்பு, தீர்மானத் தொகுப்பு, விவாதத் தொகுப்பு, முதலிய விஷயங்களிலும் நானூறு வருடங்களாக பலத்த

வேறுபாடுகள் இருந்து வந்துள்ளன. பல சமயங்களில் இவை சம்பந்தப்பட்ட விஷயங்கள் வெளிவந்துள்ளன.

10.கத்தோலிக்க-எதிர்ப்பு அல்லது சீர்திருத்த சபையினர் (Protestants) ஆரம்பித்ததிலிருந்தே இவ்விதமான கட்டுக்கதைகளைப் பரப்புவதை கடுமையாக கண்டித்து வந்துள்ளனர். பிரபல கத்தோலிக்க ஆசிரியர்களும் மதகுருமார்களும் பல சமயங்களில் தங்களது கருத்துக்களை வெளிப்படையாக சொல்லியிருக்கின்றனர்.

# 9. 1729 ல் இந்த கல்லறை சந்தேகிக்கப்பட்டது

1871 ல் மேற்சொல்லப்பட்டபடி, கத்தோலிக்க பிஷப்புகள் மற்றும் மற்றவர்களால் தாழ்மையாக மதிக்கப்பட்டு, அவநம்பிக்கையுடன் சொல்லப்பட்டதைவிட, 1729 லேயே சென்னை பாதிரி இதை 'செயின்ட் தாமஸ் கல்லறையை' சந்தேகித்து, ரோமிலுள்ள சடங்குகளுக்கான புனிதகுழுமத்திற்கு (Sacred Congregation of Rites) 'இந்த இடம்தான் செயின்ட் தாமஸின் உண்மையான கல்லறையென்று மதிக்கலாமா?' என்று தீர்மானமாகக் கருத்தை வெளியிடக் கேட்டு எழுதினார். முன்பே காட்டியுள்ள காரணங்களால் அவர் சந்தேகப்பட்டதில் வியப்பில்லை. ஆனால் ரோமின் பதில் பிரசுரிக்கப்படவில்லை. மேற்கண்ட காரணங்களாலேயோ, 1817 ல் ஏற்பட்ட அவநம்பிக்கையாலேயோ அல்லது ரோமிற்கு மைலாப்பூரிலுள்ள இரண்டு கல்லறைகள் மற்றும் கோவாவிலுள்ள கல்லறை முதலியவற்றைப் பற்றி தெரிந்திருந்தாலேயோ, கொடுக்கப்பட்ட பதிலை இந்தியாவிலுள்ள கிருத்துவர்கள் வேண்டுமென்றே பிரசுரிக்காமல் மைத்துவிட்டனர் போலும். ஏனெனில் அப்பதில் அவர்களுக்கு நிச்சயமாக சாதகமாக இருந்திருக்க முடியாது.

போப் லியோ XIII தாமஸ் 1-9-1866 தேதியிட்ட 'யூமேன் சேலுடிஸ் ஆக்டர்' (Aumane Salutis Auctor) என்ற கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளதாவது, '...இந்த தென்னிந்தியர்கள் செயின்ட் தாமஸ் கதைகளில் பெருமளவில் முழுகியிருக்கிறார்கள்... அவர் எதியோப்பியா, பாரசீகம், ஹிர்கானியா முதலிய நாடுகளில் பிரயாணம் செய்தவாறு, முடிவாக சிந்து நதியைத் தாண்டி தீபகற்பத்திற்கு வந்து தன்னுடைய இரத்தத்தை ஆத்மாக்களின் தலைமை குருவிற்கு அஞ்சலியாகச் செலுத்தினார். அதாவது மதத்திற்காக, ஆத்மாக்களின் தலைமை குருவான ஏசுவிற்காக உயிர்த்தியாகம் செய்த தாமஸைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

ஆனால் முகமதியர்களால் முதன் முதலில் (1288-93) கண்டுபிடிக்கப்பட்டு, பார்போஸா கண்ட தாமஸானவர் உயிர்த்தியாகம் செய்யாதவர். ஏசுவிற்கு எதையும் கொடுக்காதவர், ஏதேச்சையாக கொல்லப்பட்டவர் என்று முன்பே குறிப்பிடப்பட்டது ஆகையால்தான் உண்மை கிருஸ்துவர்கள் மற்றும் ஐதீக கிருஸ்துவர்கள் இந்த தாமஸ் கட்டுக்கதைகளை தம்பவில்லை. ஏற்றுக்கொள்ளவும் இல்லை. ஊக்கமளிக்கவும் இல்லை.

போப் பயஸ் X, தமது 21-12-1923 தேதியிட்ட கடிதத்தில், மேற்காணும் போப்பின் கடிதத்தைக் குறிப்பிட்டு '...இந்த தாமஸின் இறப்பானது நிச்சயமாக உயிர்த்தியாகம் அல்ல' என்று எழுதியுள்ளார்.

# 10. உயிர்த்தியாகி தாமஸ் ஆனது எவ்வாறு?

பறையனால் அம்பெய்து கொல்லப்பட்ட தியாகம் செய்யாத தாமஸ் எவ்வாறு ஏன் தென்னிந்திய கிருத்துவர்கள் மற்றும் போர்ச்சுகீசிய கிருத்துவர்கள் இப்பொழுதைய துறவியால் ஈட்டிமூலம் கொல்லப்பட்ட உயிர்த்தியாகி மற்றும் பலவிதமான தியாகிகளாக மாற்றப்பட்டார்? போர்ச்சுக்கீசிய மற்றும் இந்திய கிருஸ்த்துவர்களின் ஆவணங்களை ஆராயும் பொழுது அவர்களின் திட்டம் வெளிப்படுகிறது. போர்ச்சுக்கீசியர்கள் செல்லும் நாடுகளில் எல்லாம், "வாசனைத் திரவியங்கள் மற்றும் கிருத்துவர்களை" எதிர்பார்த்துதான் செல்வார்களாம். அவ்வாறு கிருத்துவர்கள் இல்லாவிட்டாலும், சென்ற நாடுகளில் எல்லாம் நாங்கள் ஏராளமான கிருத்துவர்களைப் பார்த்தோம், அவர்களை மதம் மாற்றினோம் (?) என்று தங்களது "குறிப்புகளில்" எழுதுவதோடல்லாமல், அதற்காக 'சின்னங்களையும்" தோற்றுவித்து தமது மன்னனுக்கு அறிவிப்பார்களாம். "துறவியால் ஈட்டி மூலம் கொல்லப்பட்ட தியாகி தாமஸ்", டி மிராகுலிஸ் தாமே (*De Miraculis Thomae*, c. 500) என்பதிலும் மற்றும் அவர்களது ஆவணங்களிலும் தான் காணப் படுகின்றது. ஆனால் ஐரோப்பா, ஆப்பிரிக்கா, மற்றும் மேற்காசிய குறிப்புகள் இவ்விதமாக குறிப்பிடவில்லை. லத்தீன் நூலான 'பேசியோ தோமே" (*Passio Thomae,* c. 500) என்பதில் "துறவியால் கத்தி மூலம் கொல்லப்பட்ட தியாகி தாமஸ்" என்று உள்ளது. Pariah-arrow-killed-martyr, pariah-arrow-killed-non-martyr ஆகி பிறகு priest-lance-killed-martyr ஆகி priest-sword-killed-martyr ஆக மாறிவிட்டார். அம்பு ஈட்டியாகி கத்தியாகி விட்டது!

பிஷப் மெல்டிகாட் தனது "இந்தியாவும், அப்போஸ்தலர் தாமஸ¤ம்" என்ற நூலில் (1905), உயிர்த்தியாகி செயிண்ட் தாமஸ், மார்கோபோலோ காலத்திலும் (1288-93) மற்றும் 1517ம் ஆண்டிற்குப் பிறகும் கிருஸ்துவர்களால் "பறையனால் அம்பெய்து கொல்லப்பட்ட மதத்திற்காக தியாகம் செய்யாதவர்" என்று தமது மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக (to save their face) அவ்வாறு விவரிக்கப்பட்டார் என்று விளக்கம் கொடுக்கிறார். ஆனால் அந்த கிருஸ்த்துவ மூதாதையர்களுள் எவருமே வேண்டுமென்றோ இல்லை தற்செயலாகவோ கொலையாளியாக இருக்கவில்லை. ஆகையால் 1288-1517 காலத்தில் எந்த கிருஸ்த்துவரும் தமது மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், ஒரு பறையன் தான், "மதத்திற்காக உயிர்த்தியாகம் செய்ய முடியாதவாறு" அந்த தாமஸை உயிரிழக்க செய்தான், அதுவும் கொலை செய்ய வேண்டும் என்ற குற்ற உணர்வே இல்லாமல் மயில் மீது குறி வைத்த அம்பு 'அந்த தாமஸின்" மீது பட்டு உயிரிழக்க நேரிட்டது. ஆனால் கிருஸ்துவ உயிர்த்தியாகவியலின் (martyrology), அவர் இந்தியாவில் வந்து ஏசுவிற்காகவோ, பைபிளிற்காகவோ, கிருஸ்துவத்திற்காகவோ உயிரிழக்கவில்லை. ஆகவே மெல்டிகாட்டின் விளக்கம் செயலற்றதாகிவிடுகிறது.

1929ல் மைலப்பூர் கத்தோலிக்க ரிஜிஸ்டரின் ஆசிரியரான கே.எஸ்.ஜி. டிகர்ஸ் என்பவர் இந்த வடக்கு-தெற்கு கல்லறைப் பற்றிக் கூறுவதாவது, "இந்த கல்லறையை வழிபடும் கத்தோலிக்கர்கள் அதன் உண்மைத் தன்மையை நம்ப வேண்டும் என்று யாரும் வற்புறுத்தப்படவில்லை, அது அத்தாட்சியின் மீது ஆதாரமாக உள்ளது என்று அவர்களுக்கு நன்றாகத் தெரியும். மற்றும் அவர்கள்

உண்மைக்கு பதிலாக தவறாகவும் கொள்ளலாம். இருப்பினும் "மதத்திற்காக உயிர்த்தியாகம் செய்தவரின்" ஞாபகச் சின்னமாக அதைக் கொண்டு, மதிக்கிறார்கள். அதிசயங்கள் எல்லாம் இந்த புகழ் பெற்ற கல்லறை அல்லது நினைவுச் சின்னங்களுடன் சம்பந்தமாக நடந்தன என்று கொள்ளும் பொழுதும், கத்தோலிக்கர்களுக்குத் தெரியும். அது மறுபடியும் அத்தாட்சியின் மீது ஆதாரமாக உள்ளது என்று. அது உண்மையாக இருந்தால் நம்பிக்கையின் விளைவாக, அந்த துறவியின் நினைவால் தூண்டப்பட்டதாக இருக்கும்" (*Mylapur Catholic Register*, 1929, p. 112), எவ்வளவு நாசுக்காக சுற்றி வளைத்து சொல்லியுள்ளார் பாருங்கள்.

முன்னுக்கு பின் முரணாக உள்ள மரபுகள் :

1. முதலில் "பறையனால் அம்பெய்து கொல்லப்பட்ட" தாமஸ், பிறகு "துறவியால் ஈட்டி எய்து கொல்லப்பட்ட" தாமஸாக மாறினார்.
2. ஏசுவிற்காகவோ அல்லது கிருஸ்துவ மதத்திற்காகவோ இறக்காமல் தியாகியல்லாதவராக் சித்தரிக்கப்பட்டவர், பிறகு தியாகியாக மாற்றப்படுகிறார்.
3. 1710 ல் எம்ப்ரன் சூலம்-தியாகியாக மாற்றப்பட்டார். ஆனால் "'பேசியோ தாமஸ்" என்ற நூலிலோ கத்தியால் இறந்ததாக குறிப்பிடப் பட்டுள்ளது.
4. மார்கோபோலோவிற்கு முந்தைய எல்லா ஆவணங்களும் உயிர்த்தியாகம் செய்த அப்போஸ்தலரின் கல்லறை மலைமீது இருந்ததாகத்தான் குறிப்பிடுகின்றன. ஆனால் மைலாப்பூரில் கடற்கரையில் "ஒரே தாமஸிற்கு" இரண்டு கல்லைறைகள் இருந்தது வியப்பாக உள்ளது.
5. தேனியின் புத்தகம் (*Book of the Bee*) என்ற நூலில் பாஸ்ராவின் மார் சாலமன் (Mar Solomon), தாமஸின் புதைக்கப்பட்ட இடம் இந்தியாவிலுள்ளதா அல்லது மாலுப்பில் உள்ளதா (India or Maluph) என்பதைப் பற்றிய விபரங்கள் மூலப் பிரதிகளைப் பார்த்து பரிசீலிக்கப்படாமல் உள்ளன என்று குறிப்பிடப்பட்டுள்ளது.
6. எல்லாவற்றிற்கும் அத்தாட்சியாக எடுத்துக் கொள்ளப்படும் "தாமஸின் பணிகளோ" தாமஸ் நான்கு வீரர்களால் ஈட்டிகளால் குத்தப்பட்டு இறந்தார் என்றும், புதைக்கப்பட்ட பிறகு அவரது சகோதரர்களுள் (சீடர்களுள்) ஒருவன் உடலை தோண்டியெடுத்து மெசபடோமியாவிற்கு எடுத்துச் சென்று விட்டான் என்றும் உள்ளது.

இனி மற்ற கதைகள் எவ்வாறு உருவாக்கப்பட்டு தாமஸ் கட்டுக்கதை எவ்வாறு வளர்ச்சி அடைந்தது என்பதைப் பார்க்கலாம்.

# 11. மாலுப், கலாமீனா, மைலாப்பூர்

மார் சாலமனின் ஒரு புத்தகத்தின் ஒரு கையெழுத்துப் பிரதி குறிப்பிடுவதாவது. "அவர் (தாமஸ்) பார்த்தியா, மெடிஸ் மற்றும் இந்தியர்கள் முதலியவர்களுக்கு உபதேசித்துவிட்டு - மாஹ்லூப் (Mahluph) அல்லது எடிஸ்ஸா (Edessa) வில் புதைக்கப்பட்டார்", என்றும் ஆனால் ஆக்ஸ்போர்டில் உள்ள மற்றொரு கையெழுத்துப் பிரதியிலோ "அவர் இந்தியா, சிந்து மற்றும் பாரசீக நாடுகளில் உபசேசித்து (இறந்த பிறகு) இந்தியாவில் அல்லது எடிஸ்ஸாவில் புதைக்கப் பட்டார்" என்றும் உள்ளது. இரண்டு கையெழுத்துப் பிரதிகளில் இரு வெவ்வேறு இடங்களைக் குறிப்பிட்டுள்ளதால், மார் சாலமனுக்கு தாமஸ் எங்கு புதைக்கப்பட்டார் என்று உறுதியாக தெரியாது என்பது தெளிவாகத் தெரிகிறது.

கையெழுத்துப் பிரதிகளிலேயே வெவ்வேறான நாடுகளில் உபதேசித்தார், புதைக்கப்பட்டார் என்று குறிப்பிடப்பட்டுள்ளதும் அவைகளிலும் உறுதியாக ஒரு நாட்டைக் குறிப்பிடாமல் "இங்கு" அல்லது "அங்கு" என்று குற்ப்பிடப் பட்டுள்ளதும், எல்லா ஆவணங்களும் "அவர் மதத்திற்காக, ஏசுவிற்காக உயிர்த்தியாகம் செய்தார்" என்று இருக்கும் பொழுது சாதாரணமாக இறந்து புதைக்கப் பட்டார் என்பதிலிருந்தும், 1531-1552 ல் போர்ச்சுகீசியர்கள் இந்தியாவில் பலவிதமான கட்டுக்கதைகள், போலி சின்னங்கள் முதலியவற்றை இந்தியாவில் பரப்பிவிட்டனர் என்பதிலிருந்தும், இந்த ஆவணங்களெல்லாம் உண்மையான, நியாயமான சரித்திர ஆராய்ச்சிக்கு எந்த விதத்திலும் ஒப்புடையதன்று என்று நிச்சயமாகத் தெரிகிறது. ஆகவே 1222 ல் மார் சாலமன் குறிப்பிட்டது மாலுப்பா அல்லது எடிஸ்ஸாவா அல்லது இந்தியாவா என்று தீர்மானமாக சொல்ல முடியாது.

மார் சாலமனின் ஒரு கையெழுத்துப் பிரதியுலுள்ளதைப் போன்று, "தாமஸ் பார்த்தியா, மெடிஸ் மற்றும் இந்திய நாட்டு மக்களுக்கு உபதேசித்தார்", என்று அவரது காலத்தவர் மற்றும் பிஷப்-பார்-ஹெர்பிரேயஸ் (Bar Herbraeus, 1226-1286) தனது "மத்தேயும் (Matthaeum) என்ற நூலில் குறிப்பிட்டதோடல்லாமல், கீழ்கண்ட மாறுபட்ட விஷயங்களையும் தருகிறார். "அவர் கலாமினாவில் (Calamina) கொல்லப்பட்டார். ஒரு இந்தியனால் (heathen) மலை மீது கொல்லப்பட்டு, யாரோ ஒருவரால் அவரது உடல் கலாமினாவிற்கு எடுத்துச் செல்லப்பட்டு புதைக்கப்பட்டார்."

முதன் முதலில் செயின்ட் இஸிடோர் (St. Isidore) என்பவரின் "டி ஆர்டு எட் ஒபிடு பேற்றம்" (*De Ortu et Obitu Patrum*) என்ற நூலில் பார்த்தியா மற்றும் மெடிஸ் நாடுகளின் கிழக்கு திசையின் முனையிலுள்ள இந்தியாவின் ஒரு ஊர், "அங்கு தான் அவர் பைபிள் உபதேசம் செய்தார். ஈட்டியால் குத்தப்பட்டு, தியாகமடைந்தார்." என்று 1250 ல் குறிப்பிட்டுள்ளார். ஆகவே இந்த "தாமஸ்", முந்தைய (அதாவது முன்பு குறிப்பிடப்பட்ட) 1288-1517 காலத்தைய, பறையனால் அம்பெய்து கொல்லப்பட்ட தியாகியல்லாத மைலாப்பூரின் கடற்கரையில் இரண்டு கல்லறைகள் - எலும்பு கூடுகள் கொண்ட "புதைக்கப்பட்ட" செயின்ட் தாமஸைவிட முழுவதும் வேறுபட்டவர் என்று தெளிவாகத் தெரிகிறது. மேலும் கி.பி. 210 ம் ஆண்டைச் சேர்ந்தது என்று சொல்லப்படுகின்ற "சிரிய பணிகள்" கூறுவதாவது "அவர் மலைமீது வீரர்களால் ஈட்டிகளால் குத்தப்பட்டுக் கொல்லப் பட்டார்" என்பதே ஆகும்.

செயின்ட் தாமஸின் ஆவணங்களைப் பற்றி படித்து, பாதிரி ஹோஸ்டன் (Fr. Hosten, S.J.) வெளியிட்டவைப் பற்றி அனைவரும் அறிவர். அவர் குறிப்பிடுவதாவது, "1522 ல் போர்ச்சுகீசியரால் மைலாப்பூரின் கல்லறையில் 16 ஜான்கள் (16 Palms) ஆழத்தில் கண்டெடுக்கப்பட்டது, செயிண்ட் தாமஸின் உடல் பகுதியாகாவிட்டால் செயிண்ட் தாமஸின் மைலாப்பூரின் சம்பந்தத்தைப் பற்றிய முழுவாதமும் பொய்யாகி விடுவதைப் போலுள்ளது." (*The Journal of the Asiatic Society*, 1923, No. 5, p. 169, fn. 5).

ஆனால் உண்மையில் 1523 ல் (1522 ல் இல்லை) 16 ஜான்களுக்கு மேல் ஆழத்தில் டியோகா பெர்னாண்டிஸ் இரண்டாவது கல்லறையைத் தோண்டிய பொழுது கிடைத்தவை: 1. தலையின் சில எலும்புகள்; 2. சில விலா எலும்புகள்; 3. முழு உடலின் சில எலும்புகள்; 4. ஒரு தொடை எலும்பு; 5. மற்ற எலும்புகள். டியோகாவின் 1543 ல் உறுதி பிரமாணத்துடன் தான் தோண்டியதைப் பற்றி கூறியுள்ள விபரங்களைக் கீழ்கண்ட புத்தங்களில் காணலாம்.

1. *Esplendorea da Religiao*, Goa, April 1989, pp. 152-6
2. *Kerala Society Papers*, Series 9, pp. 205-217 (English translation)
3. *Corrections*, Series 10, p. 220

1523 மற்றும் 1258 லிருந்து "அப்போஸ்தலர் செயின்ட் தாமஸின் எலும்புக்கூடு" (மண்டைஓட்டுடன்) என்று 1566 ல் ஒர்டோனா பிஷப் மற்றும் மற்றவர்களால், "எந்த பகுதியும் காணப்படாமல் முழுமையாக" இருந்தது என்று கிழக்கு இத்தாலியில் உள்ள ஒர்டோனா சர்ச்சில் மரியாதை செலுத்தப்பட்டு வருகிறது. ஆகையால் 1522 ல் அல்லது 1523 ல் வேறெங்கும் உண்மையான் செயின்ட் தாமஸின் எலும்புக்கூடு அல்லது பகுதி எங்கும் கிடைத்திருக்க முடியாது. ஆனால் மேற்சொல்லப்பட்ட எலும்புகள் 1522 அல்லது 1523 ல் தான் கிடைத்தன. ஆகையால் அவை "அப்போஸ்தலர் தாமஸ¤டையது" கிடையாது.

ஆகையால் ஹோஸ்டன் குறிப்பிட்டது போல, "செயிண்ட் தாமஸின் மைலாப்பூரின் சம்பந்தத்தைப் பற்றிய முழுவாதமும் பொய்யாகி விடுவதைப் போலுள்ளது", என்றில்லாமல் முழுவாதமும் 'பொய்யாகியே விட்டது'. ஆகையால் தான் 1871 லேயே இதைப் பற்றி அவநம்பிக்கையுடன் சென்னை கத்தோலிக்க அதிகாரிகள் குறைவாக மதிப்பிட்டுள்ளார்கள். ஆகையால் தான் எர்ணாகுளத்தில் செயிண்ட் தாமஸ் கிருஸ்த்துவர்கள் 1950 மார்ச்சில் கூடி, 'ஒர்டோனாவிலுள்ள செயிண்ட் தாமஸின் எலும்புக்கூடு தான் வேண்டும்' என்று பிடிவாதத்துடன் கோரிக்கையிட்டனர் போலும்.

ஆனால், அது அவர்களுக்கு கொடுக்கப்படவில்லை. பிறகு டிசம்பர் 1953 ல் ஒர்டோனா எலும்புக்கூட்டின் 'வலது கையெலும்பு' என்று கார்டினல் டிஸ்ஸெரென்ட் (Tisserant) என்பவரால் எடுத்து வரப்பட்டு 'போப்பிற்குச் சொந்தமானது' (கேரள செயிண்ட் தாமஸ் கிருஸ்த்துவர்களுக்குச் சொந்தமானது இல்லை) என்ற முறையில் கிராங்கனூர் சர்ச்சில் வழிபாட்டிற்கு வைக்கப்பட்டது. இதிலுருந்தே வாடிகனுக்கு 'இந்த விஷயத்தில்' அவர்கள் மீது எந்த அளவிற்கு நம்பிக்கை, மதிப்பு, மரியாதை உள்ளது என்பது தெரிகிறது.

1950 க்கு முன்பே, கிராங்கனூருக்கு அருகில் துருத்தூர் என்ற இடத்தில் 'ஒர்டோனா எலும்புக்கூட்டின் பகுதி' என்று வழங்கப்படும் 'எலும்புத் துண்டு' இருந்தது. இது சில ஐரோப்பிய கிருஸ்துவ மிஷனரிகள் மூலம் இந்த சர்ச்சிற்கு எடுத்து வரப்பட்டதாக கூறப்படுகிறது.

1523 ம் ஆண்டின் எல்லா எலும்புகளும் இப்பொழுதைய மைலாப்பூரின் கதீட்ரலுக்கு திருப்பிக் கொடுக்கப்பட்டு, அதில் ஒரு சிறிய பகுதி வெளியில் 'ஞாபக சின்னமாக', 'செயிண்ட் தாமஸ¤டையது' என்று வணங்கப்பட்டு இருந்திருந்த போதிலும், சில நாட்களுக்குப் பிறகு 1523 ல், 'ஒர்டோனா எலும்புக்கூட்டின் மற்றொரு பகுதி, கார்டினலால் 'உண்மையான செயின்ட் தாமஸ¤னுடையது' என்று மைலாப்பூர் சர்ச்சிற்கு கொடுக்கப் பட்டது. ஆகவே மைலாப்பூரில் தோண்டி எடுக்கப்பட்ட எலும்புகள் செயின்ட் தாமஸ¤டையது அல்ல என்பதும், அது இந்தியாவைச் சேர்ந்த யாருடையதாகவும் இருக்கலாம் என்றும் தெரிகிறது.

செயின்ட் சேவியர், ஆமாம் செயின்ட் பிரான்ஸிஸ் சேவியர் என்றால், இப்பொழுது இந்தியர்கள், யாரோ ஒரு பெரிய மகான், துறவி, பல கல்லூரி நிறுவனங்களின் ஸ்தாபகர் (ஏனேனில் அவர் பெயர் கல்லூரிகள், பள்ளிகளுக்கு வைத்திருப்பதால் அனைவருக்கும் தெரியும், என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருப்பர், ஆனால் அந்த மகான் தான் போர்ச்சுகீசிய மன்னனைத் தூண்டி, இந்தியாவில் 'கிருஸ்துவர்கள் அல்லாதவர்களுக்கு உரிய மதத் தண்டனைகளை' (Inquisition) நிறைவேற்ற 'சிபாரிசு' கடிதம் எழுதியவர். மே 16,1545 ல் போர்ச்சுகல் மன்னனான டி.ஜோஆ என்பவனுக்கு (D. Joao III) கடிதம் எழுதினார். 1560 ல் தண்டனைகளை நிறைவேற்ற அலெக்ஸோ டயாஸ் •பால்காவோ (Aleixo Dias Falcao) என்பவன் அனுப்பப் பட்டான். பிறகு நடந்தவை சரித்திர புத்தகங்களில் மாணவர்கள் படிக்க முடியாது! எண்ணற்ற இந்துக்கள் கொல்லப்பட்டனர். இந்து பெண்களின் கற்பு சூரையாடப் பட்டது. குழந்தைகள் 'குழந்தைகள்' என்றும் பாராமல் கொல்லப் பட்டன. மதமாற்றம் செய்ய வேண்டும் என்ற வெறிதான் மேலோங்கி நின்றது. இடித்துத் தள்ளப்பட்ட கோவில்களோ ஏராளம். மேலும் விவரங்களுக்கு கீழ்கண்ட புத்தகங்களைப் பார்க்கவும்.


1. "The Decay of Portuguese Power in India", by Fr. H. Heras, *Journal of the Bombay Historical Society*, Vol. I, Bombay 1928
2. *A History of the Inquisition of Spain*, 4 vols., New York 1906-7.
3. "M. Dellon and the Inquisition of Goa", *Journal of Bombay Branch of the Royal Asiatic Society*, Vol. XVIII, Pt. II (1887-1889), Bombay 1889
4. *The Goa Inquisition* by Anant Kakba Priolkar, Bombay, 1961


ரோமன் கத்தோலிக்க சர்ச், 'இந்தியாவில் அப்போஸ்தலர்' என்று உயர்வாக மதிக்கப் படும் அந்த சேவியர் 1545 ல் நான்கு மாதங்கள் மைலாப்பூரில் வந்து தங்கியிருந்தார். அப்பொழுது 1523 ம் வருடத்தைச் சேர்ந்த சில எலும்புத் துண்டுகள் மற்றும் இதர 'செயி**n**ட் தாமஸ்' ஞாபகச் சின்னங்கள் காண்பிக்கப் பட்டன. ஆனால், அவரோ தமது எழுத்துக்களில் மைலாப்பூர் அல்லது மலபாரிலுள்ள செயி**n**ட் தாமஸ் அல்லது இறந்ததைப் பற்றிய முறை முதலியவற்றைப் பற்றி ஒன்றுமே குறிப்பிடாதது

ஆச்சரியமாக உள்ளது. செயிட் சேவியர் போன்ற அசாத்தியமான கிருஸ்துவ வெறியரே, இதைப் பற்றி கண்டுகொள்ளவில்லை என்றால் யோசிக்க வேண்டும்.

தாமஸை மைலாப்பூருடன் சம்பந்தப்படுத்த முயலும் கிருஸ்துவர்கள் மார்சால்மனின் மாஹ்லூப் அல்லது மாலுப், பார்-ஹெர்பிரேயஸின்கலாமினா அல்லது கலமீனா, டெரோதேயுஸின் கலமீத்தே, நெஸ்தோரியரான அமீரின் மையிலான், ஓடரிக்கின் மினிபார், ஜான் தேமரிநொல்லியின் மாபார் மினிபார், கத்தோலிக்குஸின் மெலியாப்பூர் எல்லாமே இப்பொழுதைய சென்னையுலுள்ள 'மைலாப்பூரைத்தான்' குறிக்கின்றன என்பர். ஆனால், இவை எல்லாம் 12-13-14-15ம் நூற்றாண்டு ஆவணங்களிலுள்ள குறிப்புகள் ஆகும். செயிண்ட் தாமஸ் இந்தியாவிற்கு வந்தார் என்ற கதையே கட்டுக்கதை என்பது, அதன் ஆவணங்களே அத்தாட்சியாக உள்ளன. முதலில் 'வாய்வழி கதையாக' இருந்தது என்று வாதிடும் கிருஸ்துவ ஆசிரியர்களாலும், இக்கதை 12ம் நூற்றாண்டுக்கு முன்பு வழங்கப்பட்டது என்று காட்ட எந்த அத்தாட்சியும் இல்லை. ஆவணங்களிலுள்ள முரண்பாடுகள் முன்னமே எடுத்துக் காட்டப் பட்டன.

# 12. கிருஸ்துவ பாதிரிகளின் தென்னிந்தியாவைப் பற்றிய குறிப்புகள்

மாண்டிகார்வினோ ஜான் (சுமார் 1292-93): "...கி.பி.1291 ஆம் ஆண்டில் இந்தியாவிற்குப் புறப்பட்டேன்.....அங்கேதான் திருத்தூதர்களுள் ஒருவராகிய புனித தாமஸின் கோவில் இருக்கிறது. அந்தப் பகுதியில் உள்ள பல இடங்களுக்குச் சென்று, நான் சுமார் 100 பேரை நம்முடைய மதத்திற்கு மாற்றினேன்' (Yule: *Cathay and the Way Thither*, First Letter of John of Montecorvino, Vol. III, p. 45). இங்கு வாழ்கின்ற மக்களுக்குக் கிறிஸ்த்துவின் நற்செய்தியை எடுத்துச் சொல்வது மிகவும் பயனுடையதாய் இருக்கும் என்பது என் கருத்து. துறவிகள் இங்கு வந்தால் போதும் மதமாற்றப் பணி மிகவும் நன்றாக நடைபெறும். ஆனால், இங்கு வருகின்ற துறவிகள் உயர்ந்த குணம் உடையவர்களாய் இருக்க வேண்டும். (*Op. Cit.*, Second Letter, p.57)

ஓடோரிக் (1321-2): 'இந்த ராஜ்யத்திலுருந்து (கொல்லம்) பத்துநாள் பயணத்திற்கு அப்பால் மோபார் (யூல் சோழமண்டலம் என்று குறிப்பிடுகின்றார்) என்னும் இன்னொரு ராஜ்யம் இருக்கிறது. அது மிகவும் பெரிய ராஜ்யம். அதில் மாநகர்களும் நகர்களும் பல இருக்கின்றன. அந்த ராஜ்யத்தில் தான் நம்முடைய வணக்கத்திற்குரிய புனித தாமஸின் உடல் புதைக்கப்பட்டுள்ளது. அவ்வுடல் புதைக்கப்பட்டுள்ள மாதா கோவிலில் தெய்வச் சிலைகள் பல இருகின்றன். கோவிலுக்குப் பக்கத்தில் நெஸ்டாரியர் -அதாவது, கிருஸ்துவர் - வசிக்கும் வீடுகள் சுமார் பதினைந்து இருக்கின்றன. ஆனால், அவர்கள் கிருஸ்து மதத்தின் உண்மையான கோட்பாடுகளில் பற்றில்லாத இழிந்த குணமுடையவர்கள்' (Ibid II, pp. 141-46).

கார்டியரின் குறிப்பு: 'புனித தாமஸின் கோயில் இருந்த இடத்தைப் பற்றி ஓடோரிக் எழுதி வைத்துள்ள குறிப்பு மார்க்கோபோலோவின் குறிப்பைப் போலவே தெளிவற்றதாய் இருக்கிறது.' மாதா கோவில் என்பது தெளிவு. 'இது ஓர் இந்துக் கோவில் என்பது தெளிவு. மயிலாப்பூரில் உள்ள மாதா கோவி¢லுக்கு அருகில் இன்றைக்கும் மயிலாதேவியின் கோவில் இருக்கிறது. அது நெடுங்காலத்திற்கு முன்னரே தோன்றிய கோயில். அந்தக் கோயிலைத்தான் ஓடோரிக் குறிப்பிடுகிறார் என்று நாம் கருதலாம்'.

ஜார்டனஸ் (1323-30): 'மதமாற்றத்திற்கு இந்தியாவில் உள்ள வாய்ப்பு) ....... நம்முடைய போப்பாண்டவர் இரண்டு கப்பல்க"ளை இந்தக் கடலில் நிறுத்தினால் போதும்; நமக்கு பெரும் லாபம் ஏற்படும். அதே சமயத்தில் அலக்சாண்டிரிய சோல்டானுக்கு எவ்வளவு பெரிய அழிவு நேரிடும்! யாரே போப்பாண்டவக்கு இதனைச் சொல்லவல்லார்? . . . நம்முடைய மதத்தை தழுவிடும் இந்தியர்களுடைய உடல் கருப்பாக இருந்தாலும் ஏசுநாதரின் அருளால் அவர்களுடைய ஆன்மா வெள்ளை ஆகிவிடும். அதற்காக உழைக்கின்ற இந்த வழிப்போக்கனுடைய முயற்சி வெற்றியடைய வேண்டுமென்று நீங்கள் பிரார்த்தனை செய்யுங்கள். 'இந்தப் புனிதப்பணி விரைவில் முடியுமா? வெற்றி கிட்டுமா?' என்று எண்ணி ஏங்கி நெட்டுயிர்கிறேன்' (Yule and Cordier, *Cathay*, Vol. III, pp. 79-80).

'இந்த இந்தியாவில் அங்கும் இங்குமாகச் சிதறிக் கிடக்கின்ற சில மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்களைக் கிருஸ்த்துவர்கள் என்று சொல்லிக்கொள்கிறார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் கிருஸ்துவரல்லர்; ஞானஸ்நானம் பெற்றவரும் அல்லர்; அவர்கள் கிருஸ்துவ மதக்கோட்பாடுகளை அறியாதாவர்கள், புனித தாமஸே ஏசு கிருஸ்து என்று அவர்கள் நம்புகிறார்கள்.' (Yule, Friar Jordanus, pp. 11-25)

இனி மார்கோபோலோ என்ன குறிப்பிட்டுள்ளார் என்று பார்ப்போம். 'கோவி என்னும் இனத்தைச் சேர்ந்தவர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் புனித தாமஸ் இருக்கும் இடத்திற்குப் போகமாட்டார்கள்- அதாவது அவருடைய உடல் இருக்கும் இடத்திற்குப் போகமாட்டார்கள்- என்பதை நான் உங்களுக்கு சொல்ல வேண்டும். புனித தாமஸின் கல்லறை மாபார்' மாகாணத்திலுள்ள நகரம் ஒன்றில் இருக்கிறது. இருபது முப்பது பேர் சேர்ந்து ஒரு கோவியைக் கட்டாயப் படுத்தினாலும், தாமஸ் இருக்கும் இடத்திற்குப் போகமாட்டார்கள்- அதாவது அவருடைய உடல் இருக்கும் இடத்தில் அவனை நிற்க வைக்க முடியாது . . . இந்த இனத்தைச் சேர்ந்தவர்களே தாமஸைக் கொலை செய்தார்கள் என்பதை விரைவில் நீங்கள் தெரிந்து கொள்ளப் போகிறீர்கள்' (*Travels of Marco Polo*, (Ed.) Yule and Cordier, Book III, Chs. 26-27).

'திருத்தூதர் புனித தாமசின் உடல் மா'பாரிலுள்ள ஒரு சிறு நகரத்தில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. அந்த நகரத்தின் மக்கள் தொகை மிகக் குறைவாக இருக்கிறது. ஆனால் நகரத்திற்கு யாத்திரை செல்லும் கிருஸ்த்துவர்கள், சாரசன்கள் (முல்டானைச் சேர்ந்தவர்கள், அராபியர்கள் அல்லது முகமதியர்கள்) ஆகியவர்களுடைய தொகை பெரியதாயிருக்கிறது. சாரசன்கள்களும் புனித தாமஸை மிகவுயர்ந்தவர் என்று கருதுகிறார்கள். அவர் சாரசன் வகுப்பைச் சேர்ந்தவர் என்றும். ஒரு பெரிய தீர்க்கதரிசி என்றும் அவர்கள் நம்புவதால் அவருக்கு 'அவரியன்' என்றும் பட்டப் பெயர் கொடுத்து உள்ளார்கள். அதாவது, அவர் ஒரு புனிதர் என்று அவர்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் (*Op. Cit.,* III, Ch. 28). இதைத் தான் கார்டியர் 'தெளிவற்றதாக' இருக்கிறது என்று குறிப்பிட்டுள்ளார்.

மேற்குறிப்பிடப்பட்ட ஜான், ப்ரான்சிஸ்கன் மடத் துறவியாவர். அவர் சீனாவில் இருந்த(?) நெஸ்டோரியர்கள் மற்றவர்களை மதம் மாற்ற முயன்றார் (Yule, Cathay, Vol. I, p.169). இந்தியா வழியாக 1292-93ம் ஆண்டில் சீனாவிற்குச் சென்றார். பிற்காலத்தில் அவர் காம்லக் ஆர்ச்சுபிஷப் பதவியை வகித்தார். 1328ல் இறந்த இவர் தமது வாழ்க்கையைத் தனிமையில் கழித்துப் பழகிய அந்தத் துறவிக்கு இந்திய மக்களின் வாழ்க்கை முறையும் பழக்க வழக்கங்களிற் பெரும்பாலானவை பிடிக்கவில்லை (XXVI). அவரைப் போலவே அவருக்குப் பின் வந்த துறவிகளுக்கும் இந்திய மக்களின் வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்களும் பிடிக்கவில்லை. ஆனால், அவர்களுடைய கருத்துக்கள் அறிவார்ந்தவை என்றோ பெருந்தன்மை வாய்ந்தவை என்றோ சொல்ல இயலாது (தென்னிந்தியாவைப் பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள், தொகுத்துப் பதிப்பித்தவர்: கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1976, p. 55).

'இந்தியாவிலிருந்து ஜான் திரும்பிப் போன பின்னர் ஏறக்குறைய முப்பதாண்டு கழித்துப் பார்த்தனோன் என்னும் இடத்தைச் சேர்ந்த ஓடோரிக் என்னும் துறவி வந்தார். அவர் 1321ஆம் ஆண்டிற்குச் சிறிது பின்னர் இந்தியாவிற்கு வந்து சேர்ந்தார். அவர் ஆர்மஸில் கப்பலேறி பம்பாய்க்கு அருகிலுள்ள தானாவிற்கு வந்தார். அந்த இடத்திலோ அதற்குச் சிறிது தொலைவிலிருந்த சூரத்திலோ

கிபி.1331 ஆம் ஆண்டில் உயிரிழந்த நான்கு துறவிகளின் எலும்புகளைப் பொறுக்கியெடுத்துக் கொண்டு அவர் கிழக்கு நோக்கிப் பயணம் செய்தார். (ஜார்டனஸ் துறவி இச்செய்தியை எழுதி வைத்துள்ளார்). அவர் மலையாளக் கரையில் பந்தரனி, கொடுங்களுர், கொல்லம் முதலிய ஊர்களின் வழியாக இலங்கைக்குச் சென்றார். பின்னர் அங்கிருந்து அவர் மயிலாப்பூருக்கு வந்து புனித தாமஸ் கோவிலைக் கண்டு வழிபட்டார். அந்த இடம் தான் இன்று சென்னை என்று சொல்லப்படுகிறது' (Yule, *Cathay*, Vol. II, p. 10).

மேலே குறிப்பிடப் பட்டுள்ளதிலிருந்து எவ்வாறு அவர்கள் வேறுபடுகின்றனர், முன்னுக்குப்பின் முரணான கருத்துக்களை வெளியிடுகொன்றனர் என்பன நோக்கத் தக்கவை. மேலும், மாண்டிகார்வினோ ஜான் நமக்கு ஒரு முக்கியமான விஷயத்தை தருகிறார். "...... கி.பி.1291 ம் ஆண்டில் இந்தியாவிற்க்குப் புறப்பட்டேன். அந்த நாட்டில் நான் 13 மாதம் தங்கியிருந்தேன். அங்கே தான் 'திருத்தூதர்களுள் ஒருவராகிய புனித தாமசஸின் கோயில் இருக்கிறது. அந்தப் பகுதியிலுள்ள பல இடங்களுக்குச் சென்று, நான் சுமார் 100 பேரை நம்முடைய மதத்திற்குச் சேர்த்தேன். அப்போது சமய போதகப் பணித்துறையைச் சேர்ந்த நிக்கலஸ் என்னும் துறவி என்னுடன் இருந்து போனதால், அவருடைய உடல் நான் மேலே சொன்ன கோயிலில் அடக்கம் செய்யப்பட்டது." (Yule, *Cathay and the Way Thither*, First Letter of John of Montecorvino, Vol. III, p. 45). 1291-92 ல் ஜான் செயிண்ட் தாமஸின் கோயிலுக்கு வருகிறார்! முந்தைய அத்தியாயத்தில் எலும்புக் கூடுகளுக்கும், எலும்புத் துண்டங்களுக்கும் எவ்வாறு போட்டியிட்டு அடைய விரும்பினர் என்று பார்த்தோம்!

# 13. போர்ச்சுகீசியரும் அரேபியரும்

நமது சரித்திர ஆசிரியர்கள் எழுதியுள்ளார்கள் 'வாஸ்கோடகாமா தான் இந்தியாவிற்கு கடற்வழி கண்டுபிடித்தார்' என்று. நமது மாணவர்களும் நம்பிக்கையுடன், 'அவர் ஏப்ரல் 1498ம் ஆண்டு காலிகட்டில் வந்து இறங்கினார். அரசன் ஜமோரின் மரியாதையாக வரவேற்று, அவருக்கு சில சலுகைகளையும் அளித்தார் என்று. ஆனால் ஒரு இந்திய கப்பல் தலைவனின் உதவியுடன் தான் இந்தியவை நோக்கி தனது கப்பலை நடத்தி வந்தடைந்தார் என்ற உண்மையை எழுதமாட்டார்கள், நமது மாணவர்களும் படிக்க மாட்டார்கள்!

வாஸ்கோடகாமா இந்தியாவிற்கு வந்தது அரேபியருக்குப் பிடிக்கவில்லை. தமக்குப் போட்டியாக வந்த போர்ச்சுகீசியர்களைப் பற்றிய பல செய்திகளையும் வதந்திகளையும் பரப்ப ஆரம்பித்தனர். பதிலுக்கு போர்ச்சுகீசியர்களும், அரேபியர்களைப் பற்றிய வதந்திகளை பரப்பினர். இருப்பினும், நிலைமை கடுமையாகியதும் மூன்றே மாதங்களில் இந்தியாவை விட்டு வாஸ்கோடகாமா வெளியேறிவிட்டார்.

1501ம் ஆண்டு வாஸ்கோடகாமா மறுபடியும் இந்தியாவிற்கு வந்து கண்ணனூரில் ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்தி, 1503ம் ஆண்டு கோவாவிற்குத் திரும்பினார். காலிகட், கொச்சின் மற்றும் கண்ணனூர் முதலிய இடங்களில் அரேபியர்களின் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டாலும், தமது கொடுமையான மற்றும் அடக்கு முறைகளால் தமது வியாபாரத்தை நிலைநாட்டினர். காமாவிற்குப் பிறகு, டி-அல்மைடா (1505-90) வந்தார். பிறகு அல்புகர்க் (1509-1515) வந்தார். 1510ல் கோவாவைக் கைப்பற்றிக் கொண்டார். அன்று முதல் போர்ச்சுகீசியர்களின் தலைமையகமாக கோவா மாறியது. மலாக்கா முதலிய வாசனைத் திரவியங்க கொண்ட தீவுகளையும் பிடித்துக் கொண்டார். கொச்சின் ராஜாவின் அனுமதியுடன் அங்கு ஒரு கோட்டையைக் கட்டிக் கொண்டார். நாட்டில் பெரும்பான்மையினர் இந்துக்கள் என்பதாலும், அவர்களுடைய தயவு இல்லாமல் ஒன்றும் நடக்காது என்பதாலும், நிர்வாகத்தில் அவர்களுக்கு பொறுப்புகள் கொடுக்கப் பட்டன. ஆனால் முகமதியர்களோ அடக்கப்பட்டனர். போர்ச்சுகீசியர் இந்து பெண்களை திருமணம் செய்து கொள்வதையும் இவர் உற்சாகப் படுத்தினார். இந்தியாவில் போர்ச்சுகீசிய அரசை ஸ்தாபித்தவர் இவர் எனலாம்.

அல்புகர்க் இறந்தபிறகும் அவர்களது ஆதிக்கம் வளர்ந்தது. 1534ல் டையூ, பேசீன் முதலிய இடங்களைக் கைப்பற்றிக் கொண்டனர். பீஜப்பூர், அஹமதுநகர் மற்றும் காலிகட் அரசர்கள் போர்ச்சுகீசியரின் மீது படையெடுத்து கோவாவைக் கைப்பற்ற முயன்றும் முடியவில்லை. போர்ச்சுகீசியர்கள் இந்தியாவிற்கு வந்ததும், கிருத்தவர்களுக்கும் முகமதியர்களுக்கும் சண்டை சச்சரவுகள் ஏற்பட்டன. பல வழிகளிலும் ஒருவரை ஒருவர் மிஞ்சப் பார்த்தனர். விஜய நகரத்தின் அரசர்களுடன் நட்புறவு கொண்டிருந்தாலும், முகமதியர்களுக்கு எதிராக அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்கு உதவவில்லை. கப்பல்களை சூரையாடும் கடற் கொள்ளைக்காரர்களிடமிருந்து காக்கும் போர்வையில் பணத்தை வரி, கட்டணம் என்று கரந்தனர். அதிகாரிகளிடம் ஊழல் பெருகியது. மதவெறியர்கள் ஆதலால் கிருத்துவர்கள் அல்லாதவர்களை பலவிதத்திலும் கொடுமை படுத்தினர். மக்களை மதம் மாற்றுவதற்காக எல்லாவித யுக்திகளையும் கையாண்டனர். 1540ல்

கோவாவில் இருந்த எல்லா இந்துக் கோயில்களும் இடித்துத் தள்ளப்பட்டன (Goa Inquisition).

கடலிலோ முகமதியர்களுக்கும் இவர்களுக்கும் பலத்த மோதல்கள் ஏற்பட்டன. இந்தியாவில் இறக்குமதியாளர்களுள் பலர் போட்டியாளர்களாகக் கருதினர். காலிகட் பகுதிகளில் மிளகு வியபாரத்தில் அவர்களுடன் பலத்த மோதல் உருவாயிற்று. தென்னிந்தியாவில் இருந்த முகமதியர்கள், அக்காலத்தில் இந்தியர்கள் போலவே பழக்க வழக்கங்களுடன் வாழ்ந்து வந்தனர். ஆகவே, முகமதியர்களுக்கும் இந்துக்களுக்கும் இடையே விரிசலை ஏற்படுத்த தமது முயற்சிகளை ஆரம்பித்தனர். அதே சமயத்தில் தமது கிருஸ்துவ மதத்தைப் பரப்பவும் திட்டம் தீட்டினர். அந்த திட்டத்தின் ஆரம்பம் தான் "செயின்ட் தாமஸ் கட்டுக்கதை" இந்தியாவில் நிலைநாட்ட எடுத்துக் கொண்ட நேரடி முயற்சி.

மார்க்கோபோலோவின் 'கவி' அல்லது 'கோவி' இனத்தவரின் 'சாராயின் அவரியன்' கதைக்கு உயிர் ஊட்டம் கொடுக்கப் பட்டது. 1517 ற்குப் பிறகு "தாவம்மா" என்ற முகமதியரின் கல்லறை தான் "செயின்ட் தாமஸ்" என்று 'கண்டுபிடிக்கப்பட்டு' குறிப்புகள் எழுதப்பட ஆரம்பித்தன. மைலாப்பூரிலுள்ள இப்பொழுதிய கல்லறையைத் தவிர, பாஸ்போஸா காலத்தில் (1500-16), ஒரு முதிய முகமதியர் கண்டுபிடித்தார் என்றனர். கிருத்துவர்களும் முகமதியர்களும் அங்கு சென்று வந்தனர் என்று குறிப்பிட்டதோடல்லாமல் அக்கல்லறை இந்து கோயிலில் இருந்தது என்றும் குறிப்பிட்டனர். ஏனெனில் அவர்கள் கவி இனத்தவரை 'அராபிய காபிர்கள்" (முஸ்லீம்கள் அல்லாதவர்) என்றே மதித்தனர்.

# 14. விஜயநகர பேரரசும், போர்ச்சுகீசியரும்

விஜயநகரத்தின் அரசர்களுக்கும் போர்ச்சுகீசியர்களுக்கும் இருந்த நட்பு-பகை தொடர்புகள் "செயிண்ட் தாமஸ் கட்டுக்கதை" உருவான முறைகளை அப்பட்டமாக வெளிப்படுத்துகின்றன. ஆகவே சரித்திர ஆசிரியர்கள் கவனத்துடன் இந்த விவரங்களை ஆராய வேண்டும். இங்கு போர்ச்சுகீசியர்களுடன் சம்பந்தப்பட்ட விவரங்களை மட்டும் பார்ப்போம்.

1503ல் நரஸ நாயக்கன் இறந்தவுடன், 1505ல் வீர நரசிம்மன் பதவிக்கு வந்தார். கோவாவை மீட்கவும் முயற்சி செய்தார். மேற்கு கடற்கரையில் போர்ச்சுகீசியர் தமது வியாபாரத் தலங்களை நிறுவ முயற்சி செய்து கொண்டிருக்கும் சமயத்தில் அவர்களுடன் நட்புறவு கொள்ள முயன்றார். அல்மைடாவிற்கு கண்ணனூரில் இருக்கும் பொழுது தனது படைவீரர்கள் பயிற்சி பெறவும், குதிரைகள் பெறவும் நட்புக் குழுவை அனுப்பினார். பிறகு கிருஷ்ணதேவரின் காலத்தில், பாமினியுடன் போர் ஆரம்பித்தபொழுது, போர்ச்சுகீசிய கவர்னரான அல்புகர்க், கிருஷ்ணதேவர் காலிகட்டின் ஜமாரினிற்கு எதிராக தனக்கு உதவி செய்தால், அவருக்கு உதவுவதாக ஒரு தூதுவனை அனுப்பினார். குதிரை வியாபாரத்தில் தனித்துவம் பெறவேண்டும் என்ற ஆசையில் இருந்தாலும், உடனடியாக ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகையால் இரண்டாவது முறை அல்மைடா அணுகியபோது, பட்கல் என்ற இடத்தில் ஒரு கோட்டைக் கட்டிக் கொள்ள வேண்டி அனுமதி பூர்த்தியடைந்தது. இது அல்புகர்க் 1510ல் கோவாவைக் கைப்பற்றுவதற்கு முன் ஏற்பட்டவை ஆகும். அதற்கு முன்பு பீஜப்பூர் படைகள் மற்றும் போர்ச்சுகீசியர்கள் கைகளில் பலமுறை கோவா கைமாறிக் கொண்டிருந்தது.

கிருஷ்ணதேவர் ராய்ச்சூரைப் பிடிக்க கிருஸ்தோவயோ டி பிகுருய்டோ (Christoao de Figueiredo) என்பவன் தனது காலாட்களுடன் உதவினான். மஹாநவமி உற்சவத்தின் போது அவன் கௌரவிக்கப்பட்டான். போர்ச்சுகீசியரும் தமது வியாபார விருத்திக்கு இந்துக்கள் ஆதரவு அவசியம் என்பதனையும் உணர்ந்தனர். கிருஷ்ணதேவர் போர்ச்சுகீசியரின் உதவியுடன் விஜயநகரத்தின் நீர்பாசன வசதிகளையும் பெருக்கினார் (உண்மையில் அவர்கள் இங்குள்ள தொழிற்நுட்பத்தையறிய வந்தவர்).

அச்சுதராயர் மற்றும் அவருக்குப் பிறகுள்ள காலத்தில் போர்ச்சுகீசியர்கள் மிகவும் சுறுசுறுப்புடன் எங்கெல்லாம் தமது இலட்சியங்கள் காக்கப்பட வேண்டுயுள்ளதோ அங்கெல்லாம் கோட்டைகள் கட்ட ஆரம்பித்தனர். காலிகட்டின் ஜமாரினுடன் சண்டையிடும் அதே நேரத்தில் அவருடன் நட்புறவை வளர்த்துக் கொள்ளவும் முயன்றனர். ஆனால் பிறகு தீடிரென்று அவர்களது கொள்கைகள் மாறின. அவர்களுக்கு ஏதோ ஒரு தெய்வீக உரிமை இருந்ததைப் போல கொள்ளையடிப்பது, கோவில்களை இடிப்பது, இந்துக்களைக் கொல்வது போன்ற கொடுமையாகளை தொடர்ச்சியாக செய்ய ஆரம்பித்தனர். முக்கியமாக புகழ்மிக்க கோவிகளை சூரையாடுவதில் மிகவும் மகிழ்ச்சி கொண்டனர். அந்த கொள்ளையடிக்கும் வெறியில் திருப்பதியையும் விட்டு வைக்கவில்லை(1545).

செயின்ட் சேவியரும் தனது ரோமன் கத்தோலிக்க கூட்டத்துடன் மன்னார் வளைகுடா பகுதியிலுள்ள மீனவர்களை மதமாற்றத் தொடங்கினார். முகமதிய வியாபார்கள் மற்றும் இந்து அரசாட்சியாளர்களின் கொள்ளையடிப்புகளினின்றும் தப்ப வேண்டுமானால் போர்ச்சுகீசிய மன்னனின் ஆட்சியை ஏற்றுக் கொள்ளத் தூண்டினார். ஆனால் அவர்களோ தயங்கினர். புதிய கடவுளர்களை உடனடியாக ஏற்றுக் கொள்ளவும் அவர்களால் இயலவில்லை. அதே நேரத்தில் பிரெஞ்சு துறவியர்கள் மற்றும் ஜேசுயட் சந்நியாசிகள் கோவாவிலிருந்து காஞ்சிபுரம் வரையுள்ள கோவில்களை கொள்ளையிட திட்டம் போட்டனர். 1542-ல் கோவாவின் கவர்னரகிய மார்டின் அல்போன்சோ டி சௌஸா இந்த திட்டத்திற்கு தலைவனாவான். இதனால், ராமராயருடன் அவர்கள் கொண்டிருந்த நட்புறவும் பாதிக்கப்பட்டது. ஆனால், அதைப் பற்றி அவர்கள் கவலைப்பட்டதாக் தெரியவில்லை. பிறகு ஜோ ஆ டி காஸ்ற்ரோ என்பவனுடன் 1547 ல் ராமராயர் ஒரு உடன்படிக்கை ஏற்படுத்திக் கொண்டார்.

இங்கு 1543 செப்டம்பர் திங்களில் நடைபெற்ற சில முக்கிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிட வேண்டும். விஜயநகர சாம்ராஜ்யம் வலிவோடு திகழுவதையும், அவர்கள் பல கோவில்களுக்கு நிதி வழங்கியும், கோவில்களை புதுப்பித்து வருவதையும், மதத்தில் மிகவும் ஏடுபாடு கொண்டுள்ளதையும் கண்டு அவர்களை திகைப்படையும் வகையில் தாக்க திட்டம் தீட்டினார்.

அத்திட்டத்தின்படியே, ஓர் அதிரடி நடவடிக்கையாக போர்ச்சுகீசியர்கள் திருப்பதியைக் கொள்ளையடிக்க முடிவெடுத்தனர். கவர்னர் மார்டிம் அல்பான்சோ டி சௌஸாவின் ஆணையின் கீழ் 45 கப்பல்களில் ஒரு பெரிய கடற்படையாகப் போர்ச்சுகீசியர்கள் கோவாவிலிருந்து புறப்பட்டு வந்தனர். கேரளக் கடற்பகுதியைத் தாண்டி தமிழகக் கடற்பகுதிக்கு வந்துசேர ஒரு பொதுவான காரணத்தைக் கூறிக் கொண்டனர். அது தான் புனித தாமஸின் நினைவுச் சின்னங்களை எடுத்துக் கொண்டு குமரிக்கு அப்பால் வாழும் கிருஸ்த்துவர் மற்றும் கிருஸ்த்துவர்கள் அல்லாத மீனவர்களுக்குக் காண்பிக்கச் செல்வது என்ற திட்டம் ஆகும். சேவியர் தூண்டியும் மதம் மாற மறுத்த மீனவர்களை 'அதிசயங்கள்' காட்டி மதம் மாற்றலாம் என்ற எண்ணத்துடன் இந்த "போலி செயின்ட் தாமஸ்" சின்னங்களுடன் வந்தனர். அவ்வாறு அவர்கள் வரும் பொழுது ஒரு பெரும் புயல் மரக்கலங்களைப் பெரிதாகப் பாதித்தது. சிரமப்பட்டு அவர்கள் கன்னியாக்குமரியைத் தாண்டி வரும்போது, விஜயநகரத் தளபதி ராமராஜவிட்டலன் ஒரு பெரும் படையுடன் சென்று போற்ச்சுகீசியர்களின் திட்டத்தை முறியடித்தார்.

1588 ல் ராமராயர் இப்பொழுது சாந்தோம் என்று வழங்கப்படுகின்ற இடத்தில், கத்தோலிக்கத் துறவிகள் இந்துக் கோவில்களை இடிப்பதாக புகார்கள் கிடைத்ததால், தன்னுடைய மதத்தைக் காக்கலாம், அதே நேரத்தில் அந்நகர பணக்காரர்களிடமிருந்து தனது கஜானாவிற்கு பணமும் கிடைக்கும் என்று எண்ணி தாக்கினான். கப்பமாக 100,000 தங்க நாணயங்களைச் செலுத்துமாறு ஆணையிட்டான். அதே நேரத்தில் கோவாவினின்று வரும் உதவியைத் தடுக்க ராமராயரின் மைத்துனர் விட்டலாச்சார்யா, இக்கேரி தலைவனான சங்கண்ண நாயக்கனுடன் கோவாவைத் தாக்கினான்.

இதனால் போர்ச்சுகீசியர்களுக்கு விஜய நகர சாம்ராஜ்யத்தின் மீது அடக்க முடியாத கோபம் எழுந்தது. விஜய நகர அரசர், மக்கள், அவர்களது மதம், கோவில்கள், பழக்க வழக்கங்கள் முதலிய எல்லாவற்றின் மீதும் தாங்கமுடியாத வெறுப்பும்,

ஆத்திரமும், பகைமையும் ஏற்பட்டன. எப்படியாவது அவர்களை ஒழித்துவிட வேண்டும் என்றும் எண்ணினர். அவர்கள் இவ்வாறு மதப்பற்றுடன் இருப்பதற்கு யார் காரணம் என்று ஆராய முற்பட்டனர். விஜய நகரம் தோன்றியதிலிருந்து அதன் வளர்ச்சியடைந்த ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு அரசனுக்கும் துணையாக இருந்து ஆலோசனைகள் கூறி, வேண்டிய கருத்துக்களைப் புகட்டி, நன்னெறியில் நடத்தி வந்தவர்கள், 'பிராமணர்கள்' என்பதையும் அறிந்துக் கொண்டனர். இதற்குள் முகலாய அரசின் வளர்ச்சி, ஆங்கிலேயர்களது வரவு, போர்ச்சுகீசிய அதிகாரிகளிடையே இருந்து மலிந்த ஊழல் இவைகளெல்லாம், அவர்களது வீழ்ச்சிக்கு வழி வகுத்தன. இருப்பினும் அவர்கள் மீது பழிவாங்கும் எண்ணம் மட்டும் வளர்ந்தது, முன்பு எவ்வாறு, முகமதியர்களின் வதந்திகளால் வாஸ்கோடாகாமா மூன்றே மாதங்களில் இந்தியாவை விட்டு ஓட நேர்ந்தது என்பதனையும் சிந்தித்துப் பார்த்தனர். உடனே தமது 'தாக்குதல் முறைகளை' மாற்றிக் கொள்ளவும் தயாரானார்கள். பலவித கதைகளும் உருவாக ஆரம்பித்தன.

இந்த அத்தியாயத்திற்கு வேண்டிய அத்தாட்சிகளை கீழ்க்காணும் புத்தகங்களில் காணலாம்:


1. F.C. Danyers, *History of the Portuguese in India*, 1894.
2. K.G. Jayne, *Vasco da Gama and his Successors*, 1910.
3. R.S. Whiteway, *The Rise of Portuguese Power in India: 1497-1550*, 1899.
4. K. A. Nilakanta Sastri, *A History of South India*, 1971.

# 15. பிராமணர்களை சம்பந்தப்படுத்தும் கதைகள்

1534 ம் ஆண்டில் ஒரு கதை தோன்றியது. அக் கதை தான் 'தாமஸ்' ஒரு மைலாபூர் 'யோகியால்' கல்லடிப்பட்ட கதை. போர்ச்சுகீசிய கவிஞன் கமொயின்ஸ் (Camoens) என்பவனின் கதையாகும். இதன்படி, மைலாப்பூரிலுள்ள ஒரு யோகி தாமஸ் தன் மகனைக் கொன்றுவிட்டார் என்று குற்றஞ்சாட்ட, தாமஸ் அவனை உயிர்த்தெழச் செய்ததாகவும், இந்த அதிசயத்தால் பலர் மதம் மாறியதோடு, அவர்களது அரசனும் மதம் மாறியதாகவும், இதனால் வெறுப்புக் கொண்ட சில பிராமணார்கள் கற்களால் அடித்ததாகவும் அவர்களும் ஒருவன் ஈட்டியால் குத்தியதாகவும், இதனால் இறந்ததாகவும் விளக்கப்படுகின்றன. மேலும், அந்த யோகியின் சொந்தமான இடத்தில் ஒரு சர்ச் கட்ட முயன்றதாகவும் குறிப்பிட்டுள்ளார். 1288-1517 காலத்தைய 'பறையனால்' கொல்லப்பட்ட தாமஸைவிட, இந்த தாமஸ் கதை வித்தியாசமானது (பூம்பாவை இறந்து, திருஞானசம்பந்தரால் உயிப்பிக்கப்பட்ட நிகழ்ச்சி மைலையிலுள்ளவர்களுக்கு தெரிந்த விஷயமே. எனவே, இதை கேட்டறிந்து, தமக்கெற்றவாறு மாற்றியமைத்த கதை என்று தெளிவாக அறியலாம்). அம்பு ஈட்டியாகி கத்தியானது போல, வீரர்கள் - பறையனாகி, பறையன் துறவியாகி, துறவி - பிராமணானாகி விட்டான். இக்கதை காஸ்பர் கொரியா (Gasper Correa) 1566 ல் எழுதிக் கொண்டுருந்த (!) 'லெண்டஸ் ட இண்டியா' (*Lendas da India*) என்ற, 1496 முதல் 1550 வரை போர்ச்சுகீசியர்களின் இந்தியாவிலுள்ள நடவடிக்கைகளை விவரிக்கும் புத்தகத்திலும் ?-965;ாணலாம்.

ஆண்டுகளில் லின்ஸ்சோடன் (Linschoten) எழுதிய கதையில், 'தாமஸின் ஆணைப்படி இலங்கையிலிருந்து ஒரு மரத்தின் திம்மை வந்து மைலாப்பூரின் துறைமுகத்தை அடைத்து கொள்ளுதல், தமது அதிசயத்தால் அதைக் கரையேற்றுதல், அதிசயத்து சிலர் மதம் மாறுதல், இதனால் கோபமுற்ற சில பிராமணார்களின் தூண்டுதலால் குத்தப்பட்டு இறத்தல்' முதலியன விளக்கப் படுகின்றன. சிரில் புருஷ் பெர்த் என்பவர் குறிப்பிடும் கதையில், 'தாமஸ் நான்கு பிராமணார்களை மூப்பராக கேரளத்தில் நியமித்து, மைலாப்பூருக்கு வந்து போதித்தபோது, சில பிராமணார்களுள் ஒருவன் அவரை ஈட்டியால் குத்தி கொன்றுவிடுவதாக' உள்ளது. கேரளத்தில் இன்னும் பலவித கதைகள் வழங்கப்படுகின்றன. 874 ம் ஆண்டைச் சேர்ந்தது எனப்படும், பிரிட்டிஷ் அருங்காடிசியகத்தில் உள்ள சிரிய மொழி ஆவணம் கூறுவதாவது: 'தாமஸ் கலிமையா என்ற இடத்தில் ஈட்டிகளால் குத்தப்பட்டு இறந்தார். இங்கு 'berumhe' என்ற சிரிய சொல்லிற்கு 'ஈட்டிகளால்' (with spears) என்று பொருள். ஆனால் இச்சொல் வேண்டுமென்றே சில பாதிரிகள் மற்றும் எழுத்தாளர்கள் விஷமத்தனமாக தங்களது முன் திட்டத்தின்படி 'by Brahmins' என்று மாற்றி மொழி பெயர்த்தனர். அருங்காட்சியகத்தைச் சேர்ந்த டாக்டர் லெவீன் (Leveen) என்பவர் 1925 ம் ஆண்டு இதை சுட்டிக்காட்டியுள்ளார்: (*be* = with, *rumhe* = spear: *be rumhe* = with spears). 1517 ம் ஆண்டிற்குப் பிறகுதான் தென்னிந்திய ஆவணங்களில் இந்த மொழி பெயர்ப்பு உபயோகப் படுத்தி உருவான கதைகளின் பின்னணியை இது அப்பட்டமாக விளக்குகின்றது. போர்ச்சுகீசியர்களின் சதியும் வெளிப் படுகிறது.

இதே மாதிரி சாந்தோம் சர்ச்சிலுள்ள பல அத்தாட்சிகள் அது எப்படி முன்பு சிவன் கோயிலாக இருந்து, பிறகு படிப்படியாக அது ஆக்கிரமிக்கப்பட்டு, இடித்து தள்ளப்பட்டு சர்ச்சாக மாற்றப் பட்டது என்று பல ஆவணங்களும், புத்தகங்களும்

எடுத்துக் காட்டுகின்றன. 1924 ம் ஆண்டு அங்கு கிடைத்த எட்டு வரிகள் கொண்ட கல்வெட்டு 'சுரமுடையார் கோயில் கூத்தாடும் தேவர்க்கு (நடராஜர்) இரவில் விளக்கு ஏற்றுவதற்க்காக கொடுக்கப்பட்ட நிலமான்யத்தைக் குறிக்கின்றது. அது 12 ம் நூற்றாண்டைச் சேர்ந்த விக்கிரம சோழனின் கல்வெட்டாகும். மேலும், உள்ள கபாலீஸ்வரர் கோயிலிருந்து உற்சவ மூர்த்தியை பல்லக்கில் எடுத்துவரும் பொழுது அக்காலதில் (16-18 நூற்றாண்டுகளில்) அங்கு வரும் பொழுது மும்முறை பல்லக்கைத் தாழ்த்தி மரியாதை செய்யும் வழக்கம் இருந்தது. பதினாறாம் நூற்றாண்டு வரையிலும் சர்ச் இருந்த இடத்தில் கோயில் இருந்தது. பிறகு கிருத்தவர்கள் அதனை முழுவதுமாக இடிக்கத் தொடங்கியதும், இந்துக்கள் தமக்கு கிடைத்த விக்கிரகங்களை எடுத்து வந்து இப்பொழுதுள்ள கபாலீஸ்வரர் கோயிலைக் கட்டிக் கொண்டனர்.

# 16. தென் இந்தியாவில் தாமஸ¤க்கு ஆறு கல்லறைகள்!

1. மைலாப்பூரில் இந்துக் கோயிலில் வடக்கு-தெற்காக இருந்த உயித்தியாகியற்ற தாமஸின் கல்லறை - மார்க்கோபோலோ முதலியவர்களால் குறிப்பிடப்பட்டது. ஆனால் அவருக்கு முன்பு யாரும் குறிப்பிடவில்லை.
2. மைலாப்பூரில் இரண்டாவது கல்லறையிலிருந்து, 1522 ல் தோண்டியெடுக்கப்பட்ட தாமஸின் எலும்புக் கூடு, ஒரு அறிக்கையுடன் கோவாவிற்கு அனுப்பப்பட்டு அங்கு மரியாதை செலுத்தப் பட்டு வந்தது (Yule's Marco Polo-II 1903, p. 358)
3. கொச்சிற்க்கு வடக்கு அல்லது வடமேற்கு திசையில், ஒரு தீவிலுள்ள செயின்ட் தாமஸ் கல்லறை - 1500 ம் ஆண்டு செப்டெம்ப்பெர் 22 ம் தேதி அல் வாரேஸ் கேப்ரால் (Al Vares Cabral) வடக்குக் காற்றால் தமது கப்பல் அலைக்கழிக்கப்பட்டு இந்த தீவிற்கு வந்தபோது செயின்ட் தாமஸின் கல்லறையைக் கண்டாராம். அந்தத் தீவின் தலைவன் கிருத்துவர்களை வரவேற்று தாமஸின் எலும்புக்கூட்டை நட்பின் அடையாளமாக அளித்தானாம் (*Die Kirche der Thomas Christen*, 1877, pp. 272-3, quoting Novus Orbis, p. 95 and referring to Raulin, p. 385).
4. தென் திருவாங்கூரில் திருவான் கோடியிலுள்ள கல்லறை - இங்குள்ள ஒரு பழைய சிரிய சர்ச்சின் தெற்கு புறத்தில் ஒரு செயின்ட் தாமஸின் கல்லறை உள்ளது.
5. வட திருவாங்கூரில் மலயத்தூரில் சிவன் கோயிலுள்ள கல்லறை: மைலாப்பூரின் அரசனிடமிருந்து தப்பிக்க வந்த தாமஸை சீடர்கள் இரவில் இந்தக் கோயிலில் ஒளித்து வைக்க பகலில் கதவைத் திறந்து பார்த்து பூசாரி ஒரு உலோகக் கரண்டியால் கொன்றுவிட்டாராம் (மாத்ருபூமி வார இதழ் மார்ச் 29, 1953, கோழிக்கோடு).
6. மதுரைக்கு மேற்கில் பழனி மலைகளுக்கு அருகில் கலயமுத்தூரிலுள்ள கல்லறை- கலமீனா அல்லது கலாமினா தான் கலயமுத்தூர் என்றும், அதனால் இங்குள்ள கல்லறை தான் செயிண்ட் தாமஸின் கல்லறை என்பது. (T.K. Joseph, "Kalamina and Kala of India", *Journal of Indian History*, Vol. 28, 1950).

இதைத் தவிர இராக்கில் கெடாமல் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ள (mummified) செயிண்ட் தாமஸின் உடல்கள் இரண்டு உள்ளன. 1. போப்பின் அவையில் இந்தியாவின் மார்ஜான் III என்பவர் எடிஸ்ஸாவில் உள்ள உடலைப் பற்றி விவரிக்கிறார் (Analecta Bollandiane, Tome II-V, 1860, and V-VIII, 1889, Catalogue Cod, Hagio I, 1& 2. 2. பிஷப் எஸ்சிலினஸ் தம்முடைய புத்தகத்தில் மற்றொரு செயின்ட் தாமஸின் உடலைப் பற்றி விவரிக்கிறார். (Raulin, *Historia Ecclestia Malabaricae*, Romae, 1745, p. 377). மேலும் விவரங்களுக்கு, T.K. Joseph எழுத்யுள்ள *Six St. Thomases of South India* என்ற புத்தகத்தில் பார்க்கவும், வந்தது

ஒருவர் என்றால் - ஆறு, அதற்க்கும் மேற்ப்பட்ட எலும்புக்கூடுகள் மற்றும் உடல்கள் எப்படி இருக்கும் என்பது ஆராயத்தக்கது!

தாமஸ¤க்கு பலவித தேதிகள் கொடுக்கப் படுகின்றன. 1610ம் ஆண்டைச் சேர்ந்தது எனப்படும் 'செயிண்ட் தாமஸ் சுயசரிதை', 1892ம் ஆண்டு திருட்டுத்தனமாக திருத்தப் பட்டது. '1900 வருட நினைவு விழா' கொண்டாட வேண்டும் என்பதற்காக கி.பி. 50ல் கொச்சினில் வந்து இறங்கினார் என்பதை '52' என்று மாற்றிக் கொண்டனர். மைலாப்பூர் ஆவணம் இதற்கேற்றவாறு 68ம் ஆண்டு கொண்டுள்ள பொழுது, மலபாரிலோ -58, 65, 67, 68, 72, 73, 82, 90 மற்றும் 93 என பத்து - பதினொன்று தேதிகளைக் கொண்டுள்ளது. உள்ள ஆவணங்கள், தாமஸ் உலகம் முழுவதும் சுற்றினார் என்பது போல உள்ளது. எடிஸா, சோகோட்ரா, சைனா, சிலோன், மலாகா, ஜப்பான், ஆர்மினியா, மெசபடோமியா, சுல்தானியா, கந்தாபார், கலாபோர், காபிர்ஸ்தான் முதலிய பல நாடுகளுக்குச் சென்று மக்களை கிருத்துவ மதத்திற்கு மாற்றினாராம். அங்கெல்லாம் அவருக்கு கல்லறைகள் இருப்பதாக ஆவண குறிப்புகளும், மரபுகளும் உள்ளன. இதைப் பற்றியும் சரித்திர ஆசிரியர்கள் ஆராயலாம். மேலும் டாக்டர் ஜே.இ.லோஹிஜன் டி லீயு (Dr. J.E. Lohuizen de Leauw) என்பவர் தமது, 'ஸ்கைத்தியன் காலம்' (*The Scythian Period, 1st Cent. to 8th Cent. A.D.*, Leiden, 1949) என்ற நூலில் குறிப்பிடுவதாவது, 'கொண்டோபாரஸின் தக்த்-இ-பாஹி கல்வெட்டானது குறிப்பிடும் 103வது வருடம் 26 B.C. ஐக் குறிப்பிடுகிறது' என்பதாகும். ஆகவே 19-45 A.D. வருடங்களில் தாமஸ் அவனை சந்தித்து இருக்க முடியாது.

# 17. கட்டுக்கதை மறுபடியும் வளர்கிறது

1952ல் மார் தோமா நூற்றாண்டு விழா கேரளாவில் நடைபெற்றது. 3-7-1952ல் ஒரு தொகுப்பு நூல் வெளியிடப்பட்டது. அதிலேயே கே.இ.ஜாப் என்பவர் இந்தக் கட்டுக் கதைகளுக்கு ஆதாரங்கள் இல்லை என்று தமது கருத்தை துணிவாக வெளியிட்டுள்ளார். இங்கு சென்னையிலோ முந்திய ஆர்ச் பிஷப் இரா. அருளப்பா மற்ற கிருத்துவ ஆசிரியர்களின் உதவியுடன் செயின்ட் தாமஸையும் திருவள்ளுவரையும் முடிச்சு போட பல முயற்சிகள் நடந்துள்ளன. இவரது ஆசியுடன் (மு. தெய்வநாயகம் என்பவர்) "திருவள்ளுவர் - கிறிஸ்தவரா?" (1969), 'ஐந்தவித்தான் யார்?' (1970), நீத்தார் யார்? (1971), சான்றோர் யார்? (1972), மூவர் யார் (1973), *Thirukkural: A Christian Book* (1974), முதலிய நூல்கள் எழுதப் பட்டன. 'புனித தோமையார்' என்ற நூலை அருளப்பாவே எழுதியுள்ளார். அதே காலத்தில் இவருக்கு இதற்கான அத்தாட்சிகளை உருவாக்க கணேஷ் ஐயர் என்ற ஜான்கணேஷ் அல்லது ஆச்சார்ய பால் வாக்களித்தாராம். இந்த 'போலி ஆராய்ச்சிற்க்கு' ரூ.13,49,250/- வரையில் கொடுக்கப்பட்டது. பிறகு இந்த விஷயங்கள் -பத்திரிக்கைகள், சஞ்சிகைகளிலேயே வெளிவந்துவிட்டன. பிறகு உடல்நலம் குன்றிய காரணத்தால் அவர் ராஜினாமா செய்தார்

அதற்கு முன்பு உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில்-"கிறிஸ்தவமும் தமிழும்" என்ற அறக்கட்டளை ஏற்படுத்தி அதற்கு முழுநிலையில் நிதி உதவியும் அருளப்பா வழங்கினார். அந்நிறுவனத்தார் 1985ல் "விவிலியம் - திருக்குறள் - சைவசித்தாந்தம்- ஒப்பாய்வு" என்ற நூல் வெளியிடப்பட்டது. அதில் இந்த செயிண்ட் தாமஸ் கட்டுக்கதையை ஆதாரமாக வைத்துக்கொண்டு, அருளப்பாவின் முயற்சியான திருவள்ளுவர்-தாமஸ் இணைப்பைப் பூர்த்தி செய்து, திருவள்ளுவர் தாமஸைப் பாத்தார், பேசினார், அவருடைய பைபிள் போதனைகளை வைத்துதான் திருக்குறள் எழுதினா,. சைவசித்தாந்தமும் அவ்வாறே வளர்ந்தது, என்றெல்லாம் எழுதப்பட்டது. பிறகு இந்துமத அமைப்புகள் எதிர்ப்பு தெரிவிக்க "விவிலியம்-திருக்குறள்-சைவசித்தாந்தம் ஒப்பாய்வு" எனும் நூலின் சில பகுதிகள் இந்து சமயத்தினரின் மனம் புண்படும்படியாக அமைந்துள்ளது குறித்து வருந்துகிறோம்'. என்று உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் வெளியிட்டது. மேலும் அது "ஆராய்ச்சி நூலல்ல" என்றும் ஒரு சுற்றறிக்கை மூலம் குறிப்பிட்டது.

ஆனால் அவர்களது முயற்சிகளோ தொடர்ந்து கொண்டே தான் வருகின்றன. தயானந்த பிரான்ஸிஸ் என்பவரின் 'தமிழகத்தில் தோமையர்' என்ற நாடகம் நடத்தப் படுகிறது. இறப்பதற்குமுன், க.நா.சுப்ரமணியன் "தாமஸ் வந்தார்" என்ற நாவலையும் எழுதியிருக்கிறார். இப்பொழுதோ பாட புத்தங்களில் வந்துள்ளன. அந்தந்த மதத்தினர்க்கு அவரவர் கடவுளர்கள், போதகர்கள், நூல்கள் உயர்வாக இருக்கலாம். ஆனால், அதனால், மற்றவர்களை இழிவு படுத்த வேண்டும் என்ற எண்ணம் உண்மையான பக்தனுக்கு எழாது. இருப்பினும் பொறுப்புள்ள கிருத்துவர்கள் இத்தகைய செயல்களில் ஈடுபடுகின்றனர் என்பதைக் காணும் பொழுது மிகவும் வருத்தப்படக் கூடியதாக மட்டுமின்றி, சரித்திர ஆதாரமில்லாததாக இருக்கும் பொழுது கண்டிக்கவும் வேண்டியுள்ளது.

∴